## கவிதை

கருவில் திருவிருக் கும்! — நெஞ்சில்
கவிதை யுணர்விருக் கும்!
உருவில் ஒளிசிறக் கும்!—அவர்சொல்
ஒலியில் இசைபிறக் கும்!

காலவெளி யளக்கும்! — திறமை
கவியி னுளமுளேக் கும்!
ஞால முழுதணேக் கும் — உறவில்
நம்மை யதுபிணேக் கும்!

ஞான மது சுரக் கும் — சுவையில்
நாளும் புதிதிருக் கும்!
வானின் நிலேபிறக் கும்! — மண்ணில்
வாழ்வி லிசைநிறைக் கும்!

கருவில் திருவிருக் கும்! — நெஞ்சின்
கவிதை நமைப்புரக் கும்!
திருவின் ஒளியளிக் கும்! — நம்மில்
தெய்வ நெறிவளர்க் கும்!

— நா. சீ. வரதராஜன்

# கல்கி

## பொருளடக்கம்

குரோதி மார்கழி 13 — டிசம்பர் 27




பெரு மரத்தைச் சாய்த்து....





மலர் 24 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 22

# பொறுப்பைத் தவற விட்டார்கள்!

சமீபத்தில் புது தில்லியில் நடந்த மகாநாட்டில் எல்லா ராஜ்ய முதன் மந்திரிகளும் கலந்துகொண்டிருந்தபோதிலும் ஹிந்தி மொழி பற்றி அவர்கள் செய்த முடிவில் பிரதேச நலன்களைவிட, கட்சிக்குக் கட்டுப்பட வேண்டும் என்ற அரசியல் நோக்கம்தான் அதிகம் கலந்திருக்கிறது; இது வருந்தத்தக்க விஷயம்.

1965ம் ஆண்டு ஜனவரி 26லிருந்து ஹிந்தி நாட்டின் அரசாங்க மொழியாக்கப்பட வேண்டும் என்பது சாஸனம். சாஸனப்படியே அமுல் செய்ய உத்தேசித்துவிட்டார்கள். எவ்வளவோ ஷரத்துக்களை மாற்றியவர்கள் ஆட்சிமொழி விஷயமாக மட்டும் மூல சாஸனத்தையே பிடித்துக்கொண்டிருக்கிறார்கள். இதன்படியே ஹிந்தி மொழிக்கு அரியாசனம் அளிக்கப் போகிறார்கள். ஹிந்தி வழக்கிலில்லாத ராஜ்ய மக்கள் எழுப்பி வந்த கண்டனங்களும், ஆட்சேபங்களும் உதறித் தள்ளப்பட்டுவிட்டன.

ஆனால் ஏற்கெனவே ஒப்புக் கொண்டபடி, ஆங்கிலமும் நீடித்துச் செயலாற்றும் என்ற சலுகை, ஹிந்தி பேசாத ராஜ்யங்களுக்கு அளிக்கப்படுகிறது. இது கேவலம் சலுகைதான்; படிப்படியாகக் குறைக்கப்பட்டு, விரைவிலேயே எடுபட்டுப் போகக் கூடும்.

இந்தி பேசாத ராஜ்யங்கள் ஹிந்தி மொழியில் தங்களைத் தயார் செய்துகொள்ளுவதற்கு முன்னமே மற்ற ராஜ்யங்களிலெல்லாம் ஆங்கிலத்தின் முக்கியத்துவம் குறைந்து போகும். இதன் விளைவாக அந்த ராஜ்யங்களின் முழு சம்மதமின்றியே ஹிந்தி அவைமீது திணிக்கப்படும் நிலைமை ஏற்பட ஏது இருக்கிறது.

சர்க்காரின் தீர்மானத்தால் உண்மை நிலைமை மாறிவிடாது. ஹிந்தி மொழியின் வளமோ தகுதியோ உயர்ந்துவிடாது. ஆங்கிலத்தின் மேன்மையும் அவசியமும் குன்றிவிடாது. ஹிந்தியை வளர்க்க அரசாங்கம் பெரும் செலவு செய்யலாம். மொழிபெயர்ப்புக் குழுவினர்களை அமைக்கலாம்; புதுப் புதுச் சொற்களையும் கண்டுபிடிக்கப் பாடுபடலாம். என்றாலும், ஆங்கிலத்தின் ஸ்தானத்தில் ஹிந்தி மொழி என்றுமே திருப்திகரமாகச் செயல்பட முடியாது. தகுதியில்லாத ஒரு மொழியைப் பலவந்தமாக நாட்டின் மீது, முக்கியமாக ஹிந்தி பேசாத ராஜ்யங்கள் மீது திணிப்பதனால் ஏற்படும் விளைவுகளைப் பற்றி அமைச்சர்கள் நிர ஆலோசித்திருக்க வேண்டும்.

ஆனால் ஹிந்தி பேசாத ராஜ்ய முதன் மந்திரிகளே 'தேச ஐக்கியம், தேசப் பற்று இவற்றுக்காக ஹிந்தி எப்படியும் ஆட்சிமொழியாகத்தான் வேண்டும்' என்று கூறியிருக்கிறார்கள். நடைமுறையில் எல்லா ராஜ்யங்களையும் தொடர்புறுத்தும் ஆங்கிலம்தான் தேச ஐக்கியத்தை நிலைநாட்டி வருகிறது என்பதை மறந்து, ஐக்கியத்துக்கு விரோதமான உணர்ச்சியைத் தூண்டக்கூடிய ஹிந்தியைப் புகுத்த நினைப்பது அறிவீனம்.

ஹிந்தி ஆட்சிமொழியாவதால் தென்னக மக்கள் பல வகைகளில் கஷ்டப்பட வேண்டியிருக்கும். சர்க்கார் உத்தியோகங்களில் ராஜ்யத்துக்கு ராஜ்யம் இப்போதுள்ள சமத்துவ நிலை மாறுபட்டுப் போகும். யூனியன் சர்வீஸ் கமிஷன் பரீட்சைகளில் இது வரையில் உள்ளது போல் தமிழ் மாணவர்கள் பிற ராஜ்ய மாணவர்களுடன் சம அந்தஸ்துடன் போட்டியிட இயலாது. ஆங்கிலம், ஹிந்தி இவ்விரு மொழிகளி

னும் பரீட்சைகள் நடத்தப்பட்டாலும் மதிப்பீட்டில் வித்தியாசங்கள் தோன்றத்தான் செய்யும். ராஜ்யங்கள் தங்களுக்குள்ளேயுள்ள உறவு முறைகளையும் குறைத்துக் கொண்டு தனித் தனித் தீவுகளைப் போல இயங்க நேரிடும். ஹிந்தி பேசாத பிரதேச மக்களின் நிலையையும் உணர்ச்சிகளையும் ராஜ்ய மந்திரிகள் மத்திய சர்க்காருக்கு எடுத்துக் கூறி ஆங்கிலமே நீடிக்க வகை செய்திருக்க வேண்டியது அவர்களின் பொறுப்பு.

# போலீஸ் ராஜ்யத்துக்கு அஸ்திவாரம்

பொதுமக்களுக்கு அவசியமான பண்டங்களில் பற்றுக்குறை ஏற்பட்டிருப்பதைப் பயன்படுத்திக் கொண்டு அவற்றைப் பதுக்கி வைத்துக் கொள்ளை லாபமடிக்கப் பார்க்கும் வர்த்தகர்களுக்காக யாரும் பரிந்து பேச மாட்டார்கள். அவர்களின் நடவடிக்கை சமூக விரோதமானது. அதைத் தடுக்க வேண்டியதுதான். அதற்காகச் சட்டங்களையும் பயன்படுத்தலாம். ஆனால் இதை ஒரு காரணமாகக் காட்டி அதிகாரிகளுக்கு விசேஷ அதிகாரங்கள் அளித்து, அதற்காகத் தனிச் சட்டம் இயற்றி, அமல் நடத்துவது மக்களுடைய அடிப்படை உரிமைகளைப் பறிப்பதுடன் நீதியின் அடிப்படையையும் புறக்கணிப்பதாகும். சமீபத்தில் பார்லிமெண்டில் நிறைவேற்றப்பட்ட அவசியப் பண்ட திருத்த மசோதா இவ்வகையில் கண்டனத்துக்குரியது. இம்மசோதா மூலம் பதுக்கல்காரர்கள், அமித லாபக்காரர்கள் என்று சந்தேகிக்கப்படுவோர் வீடுகளிலும் வியாபார ஸ்தலங்களிலும் புகுந்து சோதனையிடவும், அவர்களை ஸ்தலத்திலேயே விசாரித்துத் தண்டிக்கவும் அரசாங்கத்துக்கு விசேஷ அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. தண்டனை மீது அப்பீல் செய்துகொள்ளும் உரிமை கூடப் பெருமளவு ரத்து செய்யப்பட்டுள்ளது. கேவலம் சந்தேகத்தின் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டாலும் தான் குற்றவாளி அல்ல என்று ருசுப்படுத்தும் பொறுப்புக்கூட வர்த்தகர்கள் மீதே சுமத்தப்பட்டிருக்கிறது. நமது சட்டங்களும், அவற்றை அமல் நடத்தும் நீதிஸ்தலங்களும் குற்றத்தை நிரூபிக்கும் பொறுப்பு குற்றம் சாட்டுபவர்களைத்தான் முற்றிலும் சார்ந்தது என்ற அடிப்படையில் இயங்கி வருகின்றன. ருசுப்படுத்தாத வரையில் எந்தப் பிரஜையும் குற்றவாளியாகக் கருதப்படக்கூடாது என்பதுதான் நாகரிக உலகம் ஒப்புக் கொள்ளும் கொள்கை.

இதை அடியோடு மாற்றி அமைக்கிறது இப்போது இயற்றப்பட்டுள்ள சட்டம். நள்ளிரவுச் சோதனைகள், போலீஸ் கெடுபிடிகள் போன்ற கம்யூனிஸ்டு ஆட்சி முறைகள் நம் நாட்டுச் சமூகத்திலும் இப்போது புகுத்தப் பட்டிருக்கின்றன. தான் குற்றவாளி அல்ல என்று நிரூபிக்கும் பொறுப்பை ஒருவன் ஏற்க வேண்டுமானால், எந்த மனிதனும் நிம்மதியுடன் வாழ்க்கை நடத்துவது இயலாத காரியம். இந்த உண்மையை லோகசபை விவாதத்தின்போது ஸ்ரீ எம். ஆர். மஸானி மிகத் தெளிவாக எடுத்துக் காட்டிய பின்னரும் மசோதா நிறைவேறியதென்றால் நீதியின் அடிப்படையைக் காங்கிரஸ் அரசாங்கம் எவ்வளவு தூரம் மதிக்கவில்லை என்பது விளங்கும். கட்சி பலத்தைக் கொண்டு எந்தவிதமான மசோதாவையும் நிறைவேற்றிக்கொள்ளும் செருக்கினால் நியாய உணர்ச்சிகள்கூட மரத்துப் போகின்றன.

# மயக்க மாட்டோம்; மயக்கம் தெளிவிப்போம்

'சுதந்திரக் கட்சியினால் அறிவாளிகளையும், படிப்பாளிகளையும்தான் கவர முடியும், பொதுமக்களை அதனால் கவர முடியாது. மகத்தான வாக்குறுதி கொடுப்பவர்களையும் பிரமாதமாகப் பொய்ப் பிரசாரம் செய்பவர்களையும் தான் மக்கள் ஆதரிப்பார்கள்' என்று சிலர் சொல்கிறார்கள். இதற்காகச் சுதந்திரக் கட்சி தனது கொள்கையை விடுவதற்கில்லை.

மக்களிடம் எவ்வளவு தவறான கொள்கைகள் எல்லாம் ஆதரவு பெறும் வகையில் பிரசாரம் செய்யப்படுகின்றன என்பதைப் பார்க்கும் போது துயரமாக இருக்கிறது. ஒரு ராஜ்யம் கடலில் வீணாகக் கலக்கும் தனது நீரை அண்டை ராஜ்யங்களுக்கு உதவ மறுப்பது, உணவு தானியங்களை வெளி ராஜ்யங்களுக்குப் போக விடாமல் தடுப்பது, மற்ற ராஜ்யங்களில் ஆலைகளும் அணை

களும் அமைக்கக் குந்தகம் விளைவிப்பது — இவை போன்ற குறுகிய மனப்பான்மையில் பிறந்த பல கொள்கைகள் வோட்டுச் சேகரிக்க உதவி புரிகின்றன.

இந்தக் குறுகிய மனப்பான்மையை எதிர்த்துப் பேசுவது தற்போது கஷ்டமாகி விட்டது என்பதால் சத்தியமும் அறமும் விவேகமும் காட்டும் பாதையிலிருந்து விலக முடியுமா? மக்களைக் கிளர்ச்சிகள் செய்வதற்குச் சுலபமாகத் தூண்டி விடுவது போல் அமைதியாக இருக்கச் செய்ய இயலாது. இப்படியேதான் மற்ற பல தவறான கொள்கைகள் மக்களிடம் ''எடுபடுவது'' போல் சரியான கொள்கைகளால் முடிவதில்லை. தொழில் துறையில் சர்க்கார் கட்டுப்பாடு வேண்டும். அப்போதுதான் கொள்ளை லாபத்தைத் தடுக்க முடியும் என்று துவேஷப் பிரசாரம் செய்வது சுலபமாக இருக்கிறது. ஆனால் சர்க்கார் முதலாளியாகும்போது தனி மனிதர்களைவிட அது அதிகக் கொடுமை செய்யும் என்ற உண்மையை மக்கள் மனத்தில் பதியச் செய்வது அவ்வளவு எளிதாக இல்லை. 'தொழில் துறையில் போட்டி உள்ள போது, ஒரு வியாபாரி நமக்குத் திருப்திகரமாக இல்லையெனில் இன்னொருவரிடம் வாங்கலாம். சர்க்கார் ஏகபோக்கியத்தில் இந்த வாய்ப்புக் கிடையாது. வியாபாரிகள் தனித் தனியாக இருந்த போது சக்தியற்றிருந்தாலும், அவர்கள் எல்லோரின் வியாபாரத்தையும் சர்க்கார் ஒன்றே ஏற்கும் போது அபரிமிதமான சக்தியைப் பெறுகிறது' என்ற உண்மையை மக்களுக்கு விளக்குவது கடினமாயிருக்கிறது. உற்பத்திக்கு ஊக்கம் அளிக்கும் விதத்தில் வியாபாரி நியாயமான லாபம் பெற வேண்டியது அவசியம் என்ற தர்மத்தைப் பொது ஜனங்களுக்குப் புகட்டுவது கஷ்டமாயுள்ளது.

எவ்வளவு கஷ்டமாயினும் சுதந்திரக் கட்சி விவேகமும் அறமும் காட்டும் பாதையிலேயே செல்லும். ஆரம்ப காலத்தில் பொய்யைச் சொல்லி மக்களைப் பிரமை தட்டச் செய்து வசீகரிப்பது சாத்தியமாயிருப்பினும் பிற்பாடு நிலைமை முற்றியபின் பிரமை தெளிந்தே தீரும். சுதந்திரக் கட்சி மக்களை மயக்காது. அவர்களின் மயக்கத்தைத் தெளிவிக்கவே பாடுபடும். மயக்கம் தெளியும்போது அஸ்திரங்கள் தாமாகவே எதிர்த் திசையில் திரும்பி ஆட்சியாளர்களைத் தாக்கும். ருஷியா போன்ற கம்யூனிஸ நாடுகளும் லாப நோக்கத்தின் அவசியத்தைப் புரிந்து கொண்டு அமைதியான முறையில் தொழில் சுதந்திரங்களைச் சிறுகச் சிறுக அளித்துவருகின்றன. மக்களின் அறிவையும், நல்லுணர்ச்சியையும் நம்பி, அவர்களுக்கு ஊக்கமளிக்கும் சுதந்திரக் கட்சிக் கொள்கையால்தான் நாட்டில் செல்வத்தை உண்டாக்குவதற்கும் அதிகார பலம் ஆட்சியாளரிடம் குவியாமல் தடுப்பதற்கும் வழி காண முடியும். பொருளாதாரத்தைச் சர்க்கார் கட்டுப்பாட்டில் வைக்க விரும்பும் காங்கிரஸ் கட்சி உண்மையில் மக்களை அடிமைகளாக்கி வருகிறது. இவ்வுண்மைகளை மக்கள் காலக்கிரமத்தில் நிச்சயமாக உணர்வார்கள்.

# என்ன சேதி?

## அரசியல் லஞ்சம்

அதிகாரத்திலுள்ள கட்சி, தேர்தலில் வெற்றி பெறுவதற்காக, மக்களின் வரிப் பணத்தை மக்களுக்கே லஞ்சமாகக் கொடுத்து வோட்டுப் பெறுவதைத் தடுக்க எந்தச் சட்டமும் இல்லை. இதைக் குற்றமாகக் கருதுவதற்குக் கூட சதாசார நன்னடத்தை பேசும் அமைச்சர்களாகட்டும், ஜனநாயகத்தைப் பேணி வளர்ப்பதாகச் சொல்லிக்கொள்ளும் காங்கிரஸ் கட்சித் தலைமை ஸ்தானங்களாகட்டும் முன் வருவதில்லை. இதைத்தான் அரசியல் லஞ்சம் என்று குறிப்பிடுகிறோம். ''உங்கள் ஊரில் ஒரு கிணறு வெட்டிக் கொடுக்கிறோம்; ஒரு தொழிற்சாலையை அமைத்துத் தருகிறோம்; அல்லது அரசாங்கச் செலவில் பள்ளிக்கூடம் வைக்கிறோம்; எங்களுக்கு வோட்டுப் போடுங்கள்'' என்று ஆளும் கட்சி தேர்தல் தினத்துக்கு முன்னால் பிரசாரம் செய்து வோட்டுப் பெற்றால் இது எவ்வளவு இழிவான, கீழ்த்தரமான லஞ்சம்! ஜனநாயகத்தையே இழிவுபடுத்துவதற்காகக் கொடுக்கும் லஞ்சம் அல்லவா? காலஞ் சென்ற பிரதமர் ஜவாஹர்லால் நேருவின் தொகுதியான பூல்பூர் தொகுதி உப தேர்தலில் இம்மாதிரி முறைகள் கையாளப் பட்டது தெரிந்த விஷயம். குற்றச் சட்டத் திருத்த மசோதாவின் மீது ராஜ்ய சபையில் நடந்த விவாதத்தில் சுதந்திரக் கட்சி அங்கத்தினர் பேரா

ரியர் எம். ரத்தினசாமி இதனை ன்மையாகக் கண்டித்ததற்காக அவரைப் பாராட்டுகிறோம்.

### பலனளிக்காத பஞ்சாயத்துராஜ்யம்

பஞ்சாயத்து ராஜ்ய முறை வெற்றிகரமாகச் செயல்படவில்லை; இதன் மூலம் எதிர்பார்த்த நன்மைகள் கிட்டவில்லை; ஆகவே இது தோல்வியுற்றதாகவே கருத வேண்டும் என்று பொருள்படப் பேசியிருக்கிறார் குஜராத் ராஜ்ய முதன் மந்திரி ஸ்ரீ பலவந்த்ராய் மேத்தா. இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமே இல்லை. கிராம நலன், கிராம முன்னேற்றம், கிராமங்களில் மக்கள் ஆட்சி என்பது போன்ற கோஷங்களைச் சொன்னாலும் பஞ்சாயத்துத் தேர்தல்களும், நிர்வாகமும் மற்ற துறைகளில் நடப்பது போலவே கட்சி அடிப்படையில்தான் நடைபெறுகின்றன. பஞ்சாயத்து சபை அங்கத்தினராகவோ தலைவராகவோ தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டால், தாங்கள் வாழ்க்கையின் லட்சியத்தை எட்டிப் பிடித்துவிட்டதாகவே எண்ணி விடுகின்றனர். வரி விதிக்கும் உரிமையும் இதர அதிகாரங்களும் அவர்களுக்கு அளிக்கப்பட்டிருப்பதால் பஞ்சாயத்துத் தலைவர்கள் குட்டிச் சர்வாதிகாரிகளாகவே செயல்படுகின்றனர். காங்கிரஸ் கட்சியின் முன்னணி வீரர்களாகக் கிராமங்களில் கட்சியைப் பலப்படுத்தும் பணியில்தான் அதிகமாகக் கவனம் செலுத்துகின்றனர். கிராமங்களில் வகுப்புத் துவேஷங்களும் கட்சிப் பிளவுகளும் அதிகரித்திருப்பதற்குப் பஞ்சாயத்து ராஜ்ய முறையை முக்கிய காரணமாகச் சொல்லலாம். பஞ்சாயத்து மகாநாடுகள், விழாக்கள் போல நடத்தப்படும் காட்சிகளையும், அவற்றுக்காக எவ்வளவு பணம் வீணடிக்கப்படுகிறதென்பதையும் சென்னை ராஜ்ய மக்கள் நன்றாகவே உணர்ந்திருக்கிறார்கள். இது ஓர் உதவாக்கரை ஏற்பாடு என்பதைச் செல்வாக்குள்ள காங்கிரஸ் பிரமுகர் தெளிவுபடுத்திய பின்னராவது இதை அரசாங்கம் கைவிடுவது நலம்.

### ஆதரவற்ற தொழிற் கலைஞர்கள்

பொற்கொல்லர்களைப் பற்றிப் பேசுவோர் யாருமில்லை. நமது நாகரிகக் கலையில் உயர்ந்த பணி செய்து வந்த பொற் கொல்லர்கள் பரிதாபமாக நசித்து வருகிறார்கள். அவர்களின் அழுகுரலை அரசாங்கம் கேட்காதது மட்டுமின்றி, வர்த்தக சமூகமே கவனித்ததாகத் தெரியவில்லை. வர்த்தக சமூகம் முழுவதற்கும் உள்ள பிரச்னைகளை மட்டுமே கவனிக்க வேண்டுமென்றும், அதன் ஒரு பிரிவினர் தங்கள் கஷ்டத்தைத் தாங்களே தீர்த்துக் கொள்ளட்டும் என்றும் நினைக்கிறார்களோ என்னவோ? நம் மக்கள் பலவாகப் பிரிந்து தனித் தனிப் பகுதிகளாகி விடுவதால் ஏற்பட்ட தவறான, துயர நிலை இது. இதனால்தான் மற்றப் பிரிவினரின் கூட்டான எதிர்ப்பு இல்லாமல் அரசாங்கம் ஒவ்வொரு பிரிவையும் எளிதில் வேட்டையாட முடிகிறது!

# ஸங்கீத "ஸீஸன்"

இவ்விதழ் வாசகர்களுக்குக் கிடைக்கும்போது சென்னை ஸங்கீத ஸீஸன் விறுவிறுப்புடன் நடைபெற்றுக் கொண்டிருக்கும். நிகழ்ச்சிகளும் நடைமுறைகளும் பல்லாண்டுகளாகப் பழக்கப்பட்ட நல்ல பாதையிலேயே அமைந்திருக்கின்றன. இசைக் கலைக்குச் சிறப்புப் பணியாற்றும் பிரதான ஸ்தாபனங்கள் அவைகள் வகுத்துக் கொண்டுள்ள முறைப்படியே ஒவ்வோர் அம்சத்துக்கு முக்கியத்துவம் அளித்துத் தொண்டாற்றி வருகின்றன.

சென்னை மியூஸிக் அகாடெமியில் கர்னாடக சங்கீதத்தின் சாஸ்திரீயப் பெருமைகளுடன் ஹிந்துஸ்தானி சங்கீதத்தின் நுட்பங்களையும் ரச உணர்ச்சிகளையும் தமிழ் மக்களுக்குக் குறைவின்றி வழங்கப்படுகின்றன. மேல் நாட்டு இசை முறைகளையும் நம்மவர்களுக்கு விளக்கி வைக்கும் தொண்டில் மியூஸிக் அகாடெமி போற்றத்தக்க முயற்சி எடுத்துக் கொண்டுள்ளது. மேல் நாட்டு சங்கீதத்தின் மீது நம்மவர்கள் அதிக மோகம் கொள்ளாவிட்டாலும் கர்னாடக சங்கீதத்தையும் பரதநாட்டியத்தையும் அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யக் காரணமாக இருந்த பெருமை மேல் நாட்டினருக்கு உண்டு. கர்னாடக இசைக் கச்சேரி நமது சங்கீத சபைக் கச்சேரி ரீதியில் எடின்பரோவில் உலக இசை விழாவில் நடைபெற்றதென்றால் அதைக் கண்டு நாம் பெருமைப்பட வேண்டும்.

இவ்வாண்டு விழா இரண்டு விதங்களில் பெருமை பெறுகிறது. தொடங்கி



திரு ஜி. டி. பிர்லா



ஆலத்தூர் சிவசுப்பிரமணிய அய்யர்



சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை

வைத்தவர் இந்தியத் தொழிலதிபர் வள்ளல் திரு ஜி. டி. பிர்லா. காந்திஜியின் அத்யந்த பக்தர். அவருடைய சிந்தனைகளையும் கருத்துக்களையும் தமது வாழ்க்கையிலும் கடைப்பிடித்தொழுகுபவர் என்ற புகழுடன் கலைக்கும் கல்விக்கும் போஷகராகப் பிரகாசிப்பவர். கர்னாடக சங்கீதம் மேலும் வளம்பெறும் என்பதற்கு இது ஒரு சுப சூசகம். இரண்டாவது, தலைமை தாங்கும் வித்வான் ஆலத்தூர் சகோதரர்களில் ஒருவரான திரு சிவசுப்ரமண்ய அய்யர். பல்லாண்டுகளாக முன்னணி வித்வானாகக் கச்சேரிகள் செய்து ரசிகர்களை மகிழ்வித்து வருகிறார். விவகார சங்கீத வகையைச் சார்ந்தது இவருடைய இசைப்புலமை என்றாலும், ரச பாவங்களையும் குறைவின்றி அனுபவித்து வழங்கும் திறமையும் ஆற்றலும் படைத்தவர். ''ஜோடிப் பாட்டு'' வாத்திய இசைக்குத்தான் ஏற்றது என்று யாராவது எண்ணினால் வாய்ப்பாட்டுக்கு அதைவிடச் சாலப் பொலிவு தரும் என்பதை நிரூபித்து வருகின்றனர் ஆலத்தூர் சகோதரர்கள். கன சாரீரமும் சன்ன சாரீரமும் ஒன்றுக்கொன்று துணை நின்று இசைக்கும்போது அலாதி இன்பம் இருக்கத்தான் செய்கிறது. ஸ்வரப்ரஸ்தார கட்டங்களில் இதற்கு இணையே இல்லை என்று கூடத் தோன்றும்.

தமிழ் இசையின் நுட்பங்களையும் மரபுகளையும் மறைந்து போகவிடாமல் வெளிக்கொணர வேண்டுமென்ற உயர் நோக்கத்துடன் பல ஆண்டுகளுக்கு முன் தொடங்கப்பட்ட தமிழ் இசைச் சங்கம் ஆண்டுதோறும் தமிழிசையில் ஆராய்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் எல்லையில்லாத வாய்ப்பு இருக்கிறது என்பதை நிரூபித்து வருகின்றது. தமிழ் இசைச் சங்க விழாவில் நடைபெறும் பண் ஆராய்ச்சிகளும் பண்டைக்காலக் காப்பியங்களுக்கு இசை வடிவம் அமைத்துப் புத்தொளியுடன் ரசிகர்களுக்கு வழங்கும் புதுப் புது நிகழ்ச்சிகளும் பாராட்டப்பட வேண்டியவை. தமிழ் இசைச் சங்க வளர்ச்சியைச் சிலை வடிவில் தலைவாயிலில் நின்று கவனித்து வரும் ராஜா ஸர் அண்ணாமலை செட்டியாரின் உள்ளம் இதைக் கண்டு பூரிப்படையும் என்பதில் ஐயமில்லை.

தமிழ் இசை விழாவிற்குத் தலைமை தாங்கும் வித்வான் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை ஏற்கனவே சங்கீத கலாநிதி விருது பெற்றவர். இசைப்பேரறிஞர் என்ற விருதையும் இப்போது பெறுகிறார். இவ்விருதுகளுக்கு முற்றிலும் அவர் தகுதியுள்ளவர். லய வித்வான் காஞ்சிபுரம் நாயனா பிள்ளையுடன் நீண்டகாலம் பாடிப் பழகியதனால் அவருடைய அபூர்வ லய விவகாரங்களும் பிற இடங்களில் சாதாரணமாகக் கேட்க முடியாத எட்டு களை, பதினாறு களை பல்லவிகளையும் இவரிடம் கேட்கலாம். இசை உலகில் தாம் உயர் ஸ்தானத்தை அடைந்து விட்ட பின்னர் தம் வித்தையைத் திரு சித்தூரார் பலருக்குக் கல்லூரிகள் வாயிலாகப் புகட்டி நற்பணியாற்றுவதைப் பாராட்ட வேண்டும். தமிழ் இசைக்கு இவருடைய தொண்டு மிகுந்த சிறப்புடையது.

கலாக்ஷேத்திரத்தின் கலை விழா டிஸம்பர் ஸீஸன் நிகழ்ச்சிகளில் எப்போதுமே தனி இடம் பெற்றுள்ளது. ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் கலை சிருஷ்டிகள் ஒவ்வொன்றும் நமது பண்டைக் கலைச் சிறப்புக்களை அணு அணுவிலும் பிரகாசிக்கச் செய்யும் தன்மையது.

ரசிகர்களின் மனோபாவத்துக்கு ஏற்பப் பேச்சானாலும், பாட்டானாலும், நாடகமானாலும் பூரண திருப்தி காண முழு வாய்ப்பு அளிக்கிறது இந்த ஸீஸன். இவ்வளவு விரிவான முறையில் எல்லா ஸ்தாபனங்களும் ஒரே சமயத்தில் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து ரசிகர்களைத் திணறவைக்க வேண்டுமா என்று பிரமித்துப்போகும் அளவுக்கு இசை விழாக்கள் நிகழ்கின்றன.

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## கார் சவாரியில் ஒரு புது அனுபவம்



## கீழ்க்கண்ட போற்றத்தக்க வசதிகளுடன் கூடியது

- 25 அடி வட்டத்திற்குள் திருப்ப முடியும்
- ஒவ்வொரு சக்கரத்திற்கும் தனித்தனி சஸ்பென்ஷன் (Suspension) இணைப்பு இருக்கிறது (சுலபமாக அபாயமின்றி திருப்பலாம். ரஸ்தாவில் நல்ல பிடிப்பு உண்டு. முன் சக்கரத்திற்கு ஏற்படும் அதிர்ச்சி முன் சக்கரத்தின் ஸ்ப்ரிங்கிலேயே தாங்கிக்கொள்ளப்படுவதால், வண்டியின் பின்புறம் அதிர்ச்சியோ, ஆட்டமோ அடையாது.)
- ஃகு கர்டரினுலான சாஸிஸ் (Chassis) (மிக உறுதியான கார் அமைப்பு)
- 93% வெளிப்பார்வை வசதி.

**STANDARD herald**

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

**உறுதியான, *எழில் மிகுந்த* கார்**

*தயாரிப்பாளர்கள் :*

ஸ்டாண்டர்ட் மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்
சென்னை.2




*விநியோகஸ்தர்கள் :*

யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிமிடெட்
சென்னை உதகை
யுனிகான் (பெங்களூர்) பிரைவேட் லிமிடெட், பெங்களூர்

FDS/SM/4-TM

# கந்தன் கருணை

## திருமுருக கிருபானந்தவாரியார்

### 8. ஐயன் அவதரித்தான்!

பிரமன் முதலிய தேவர்களை நோக்கிச் சிவபிரான், ''நீங்கள் வருந்த வேண்டாம்; ஒரு புதல்வனைத் தருவோம்'' என்று திருவாய் மலர்ந்தார்.

வேண்டத் தக்கது அறிவோனும், வேண்ட முழுதும் தருவோனுமான ஆண்டவன்தான் எதனை எந்தச் சமயத்தில் தர வேண்டும் என்பதையும் அறிவார். அதற்கேற்ப இப்போது முருகனைத் தர வேண்டிய தருணம் வந்து விட்டது என்பதாகப் பெருமான் கருதினார்.

முன்பு திரிபுர தகனத்தின் போது திருத்தேரும், படைக்கலமும், பரிவாரமும் சித்தம் செய்யுமாறு தேவர்களைப் பணித்துப் பின்னர் அவற்றைப் பயன் படுத்தாது தமது பராக்கிரமத்தாலேயே பகைவரை வென்ற பரமேசுவரர் அல்லவா அவர்? இப்போதும் அவ்வாறே முருகன் பிறப்புக்கென ஓர் ஏதுவாகத் தேவியைப் பர்வதபுத்திரியாக்கி, திருமணம் புரிந்து திருக்கைலாயம் சேர்ந்த ஐயன் இறுதியில் அவளிடமிருந்து புதல்வனைத் தராமல் தாமாகவே குமரனைத் தந்தருள எண்ணினார். அவரது லீலையை நாம் எப்படி அளப்பது?

ஐயன் வேறு, அன்னை வேறு என்று பிரித்துப் பார்க்கக் கூடாது, என்றுமே அவர் அம்மையப்பன் என்பதை உணர்த்தத்தான் இவ்வாறு அருள் கூர்ந்திருப்பாரோ ?

'பரமேசுவரனுக்கு ஐந்து முகங்கள், தேவிக்கு ஒரு முகம்—ஆக ஆறுமுகத்திலுள்ள ஆறு நெற்றிகளிலிருந்து அவர் ஆறு பொறிகளைத் தோற்றுவித்து ஆறுமுகனை உண்டாக்கினார், எனச் சிலர் கூறுவர். இது தவறு. பரமேசுவரனுக்கே ஸத்யோ ஜாதம், வாமதேவம், தத்புருஷம், ஈசானம், அகோரம் என்று வெளிப்படத் தெரியும் ஐந்து முகங்களோடு பரம ஞானியரின் உள்நோக்குக்கு மட்டும் புலப்படும் உள் முகமாக ஆறுவது திருவதனம்—அதோமுகமாக — உள்ளது. இவ்வாறு இருமுகமுள்ள திருக்கோலம் தாங்கிய பெருமான் அவை ஒவ்வொன்றின் நெற்றிக் கண்ணினின்றும் அருட் பெருஞ் சோதிப் பொறி ஒவ்வொன்றினை வழங்கியருளினார். அப்பொறிகள் அளவுகடந்த வெப்பத்துடன் உலகெங்கும் பரவிப் பறந்தன. அச்சோதியின் வெப்பத்தைத் தாங்க மாட்டாது வானவர்கள் மூலைக்கு ஒருவராக ஓடினார்கள். வாயுக்கள் உலைந்து ஓய்ந்தன; கடல்கள் வற்றின; வடவாமுகாக்கினியும் தன் செருக்கு நீங்கிற்று; பூமி பிளந்தது; மலைகள் யாவும் நெக்கு விட்டன; அட்ட நாகங்களும் நெளிந்து நீங்கின; அட்ட திக்கயங்களும் அழுது நியங்கின; உயிர்கள் எல்லாம் நடுங்கின. ஆயினும், அப்பொறிகள் இறைவன் அருளினால் பெருங்கருணை செய்யும் வண்ணம் பிறந்தன வாதலால் எவ்வுயிரையும் நாசம் செய்யவில்லை. வெறும் அச்சத்தை மட்டுமே ஏற்படுத்தின. இனிமையே உருவான முருகன் அச்சமூட்டும் வகையில் தோன்றியதையும் நமக்குப் புரியவொண்ணாத ஈசுவர லீலை என்று தான் சொல்ல வேண்டும். அன்பனும் நண்பனும் பரமபக்தனுமான அர்ச்சுனனுக்குக் கண்ண பெருமான் விசுவரூப

ரிசனம் காட்டும் பாது அவனே நடுடுங்கவே செய்தான்றோ?

இறைவனின் நெற்றிக் கண்களினின்று நெருப்புப் பொறி புறப்பட்ட போது, எம்பிரானின் அருகே வீற்றிருந்த உமா தேவியாரும் அப்பொறிகளின் வெம்மையைத் தாங்காது திருவுளம் கலங்கித் தம் திருவடியிலுள்ள சிலம்புகள் புலம்பித் தாக்கத் திருக்கோயிலினுள்ளே ஓடினார்.

கடலில் கப்பல் செல்கிறது. கப்பல் நடுக் கடலுக்குப் போய் விட்டது. அக்கப்பலின் கொடி மரத்தில் காகங்கள் கூட்டமாக உட்கார்ந்திருக்கின்றன. மாலுமி அக்காகங்களை அடித்து விரட்டுகிறான். காகங்கள் அங்கிருந்து பறக்கின்றன. நடுக் கடல். காகங்கள் எங்கே சென்று புகலிடம் தேடும்? நாலா பக்கங்களிலும் பறக்கும். எங்கும் புகலிடம் கிடைக்காமல் திரும்பவும் கப்பலின் கொடி மரத்துக்கேதான் வந்து சேரும். அதே போல் அஞ்சிய தேவர்கள் யாவரும் திரண்டு மீண்டும் கயிலாயத்துக்கே வந்தார்கள். சிவபெருமானைக் கண்டு, ''அசுரர்களை மாய்ப்பதற்கு ஒரு மைந்தனை அருள வேண்டும் என்று வேண்டினோம். முடிவில்லாத வெப்பத்தை யுடைய அக்கினியை வழங்கி விட்டீர்களே; நாங்கள் உய்வது எவ்வாறு? அக்கினிப் பொறிகளின் வெம்மை தணியாவிட்டால் இன்னும் ஒரு கணத்தில் உலகமெல்லாம் அழியும். காப்பாற்றுங்கள்'' என்று முறையிட்டார்கள். இறைவன் தேவர்களிடம், ''அஞ்சாதீர்கள்'' என்று கூறிப் புதிதாகக் கொண்ட ஆறு திருமுகக் கோலத்தை மறைத்து முன்

போல ஒருமுகத்தோடு எழுந்தருளி, உலக மெங்கும் பரந்த அக்கினிப் பொறிகள் தமது திருமுன் வரும் வண்ணம் திருவுளம் கொண்டார்.

ஆறு அக்கினிப் பொறிகளும் எம்பிரான் திருமுன் வந்தன. இறைவன் வாயு தேவனையும் அக்கினி தேவனையும் நோக்கி, ''நீங்கள் இருவரும் இந்த அக்கினிப்பொறிகளைத் தாங்கிக் கொண்டு போய்க் கங்கையில் விட்டு விடுங்கள்; கங்கை அவற்றை சரவணப் பொய்கையில் கொண்டு போய்ச் சேர்க்கும்'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.



வாயு தேவனும், அக்கினி தேவனும் அஞ்சி நடுங்கினர். எம்பெருமானை வணங்கி, ''தேவ தேவ! இந்த அக்கினிப் பொறிகளின் வெம்மையைத் தாங்க எங்களால் முடியுமா? ஆலகாலம் போல் படர்ந்த இந்த அக்கினிப் பொறிகளைக் கண்டு ஓடியவர்களல்லவா நாங்கள்? இந்த அக்கினிப் பொறிகளை நெருங்கவே அஞ்சுகின்ற நாங்கள் எப்படிச் சுமந்து கொண்டு செல்ல இயலும்?'' என்று விண்ணப்பித்துக் கொண்டனர். ''இந்தத் தீப்பொறிகளைத் தாங்கும் ஆற்றலை உங்களுக்கு அளித்தோம்'' என்று சிவபெருமான் அருள் புரிந்தார். வாயுவும், அக்கினியும் வாயு வாயும் அக்கினியாயுமிருப்பது அவர் தந்த ஆற்றலால்தானே?

''இத் தழற் பிழம்பு சரவணப் பொய்கையை அடைந்து ஒரு திருக் குமரனாய் வளர்ந்து, சூராதி யவுணர்களை அழித்து உங்களுக்கு அருள் புரியும். நீங்கள் அனைவரும் உங்கள் இருப்பிடத்துக்குச் செல்லலாம்'' என்று எம்பெருமான் தேவர்களுக்குக் கூறியருளினர்.

தேவர் யாவரும், ''உய்ந்தோம்; உய்ந்தோம்'' என்று சிவபெருமானை வணங்கி அங்கிருந்து விடைபெற்றனர்.

வாயுதேவன் எம்பெருமானை வணங்கித் தீப்பொறிகள் ஆறையும் முதலில் சென்னி மேல் தாங்கிச் சென்றான். திருமால், பிரமன் முதலிய தேவர்கள் பெருமகிழ்ச்சியுடன் வாயுதேவனைப் பின் தொடர்ந்தனர், சுவாமியின் திரு அவதாரம் காண்பதற்காக. ஒரு நாழிகை சென்றது. வாயுதேவன் தீப்பொறிகளின் வெம்மை தாங்காது அக்கினி தேவனிடம் சேர்த்தான். அக்கினி தேவன் சென்னி மேல் தாங்கினான். இவ்வாறு மாறி மாறித் தாங்கிக் கொண்டு போய்க் கங்கையில் சேர்த்தனர். அப்பொறிகளின் வெம்மை தாங்காது கங்கையும் வற்றத் தொடங்கியது. இறைவன் அருளை உணர்ந்த கங்கை, அவற்றை ஏந்திச் சென்று ஒரு நாழிகைக்குள் இமய மலைச்சாரலில் உள்ள சரவணப் பொய்கையில் சேர்த்தாள்.

விளைவை நாடும் வறியவர் போல் திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் சரவணப் பொய்கையைச் சூழ்ந்து காவல் புரிந்தனர்.

சிவபெருமான் அருளால் சரவணப் பொய்கை, கங்கையைப் போல் வற்றவில்லை. அப்பொழுது, அருவமாயும், உருவமாயும் அநாதியாயும் ஒன்றாயும் பலவாயும் பரப்பிரம்மமாயும் நின்ற பரமசிவ சோதிப் பிழம்பே ஒரு திருமேனியாக வடிவு கொண்டது. பரம்பொருள் கருணை வெள்ளம் பொழியும் ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு திருக் கரங்களும் கொண்டு உலகமெல்லாம் உய்யும் வண்ணம் முருகக் கடவுளாகத் திரு அவதாரம் செய்தருளியது.

**அருவமும் உருவும் ஆகி**
**அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்**
**பிரமமாய் நின்ற சோதிப்**
**பிழம்பதோர் மேனி ஆகக்**
**கருணைகூர் முகங்கள் ஆறும்**
**கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே**
**ஒருதிரு முருகன் வந்தாங்(கு)**
**உதித்தனன் உலகம் உய்ய**

முருகப் பெருமான் திரு அவதாரம் செய்தவுடன் ஆகாயத்திலே தேவ துந்துபிகள் முழங்கின; வேதங்களெல்லாம் ஆர்த்தன; திருமாலும், பிரமனும், இந்திரனும், முனிவர்களும் பூமாரி பெய்து, ''அடியேங்களுக்கு அருள் செய்க'' என்று துதித்துச் சூழ்ந்தார்கள். உலகத்து உயிர்கள் மகிழ்ச்சி கொண்டன; அவுணர்களுக்குத் தீய அறிகுறிகள் தோன்றின.

வேதங்களின் முடிவாலும், மனத்தாலும், வாக்காலும் அறிய ஒணாது




# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட அமிர்தாஞ்சனம், ஜலதோஷம் மற்றும் மார்புச்சளி இவைகளிலிருந்து பூரணமாக நிவாரணம் அளிக்கிறது. தசைவலி, தலைவலி, களுக்கு இவைகளுக்கும் சிறந்த வகையில் நல்ல குணமளிக்கும் மருந்து அமிர்தாஞ்சனம். ஒருசமயத்தில் தேவையான தெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால் ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக்கணக்கில் வரும் • அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டு வரும் கைகண்ட நிவாரணி!




பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த!
அமிர்தாஞ்சனம் . வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி

அமிர்தாஞ்சன் லிமிடெட்
மதராஸ் • பம்பாய் • கல்கத்தா • டெல்லி

எங்கும் நிறைந்து நின்ற சிவபெருமானே கருணையுடன் ஆறு திருமுகங்களை உடையவராகித் தோன்றியருளி சரவணப் பொய்கையில் ஆயிரத்தெட்டு இதழ்களோடு கூடிய செந்தாமரை மலரின் மீது இனிது வீற்றிருந்தருளினார்.

**மறைகளின் முடிவால் வாக்கால்**
**மனத்தினால் அளக்கொ ணாமல்**
**நிறைவுடன் யாண்டு மாகி**
**நின்றிடும் நிமல மூர்த்தி**
**அறுமுக வுருவாய்த் தோன்றி**
**அருளொடு சரவ ணத்தின்**
**வெறிகமழ் கமலப் போதில்**
**வீற்றிருந் தருளி னானே**

முருகப் பெருமானுடைய அவதாரத் தத்துவத்தை இனிச் சற்று அறிவோம். உலகத்தின் க்ஷேமத்துக்காகக் கடவுள் பஞ்சபூதங்களில் படிப்படியாக வெளி, காற்று, கனல், புனல், மண் இவற்றின் வழியே தோற்றம் பெறுகிறார் என்பது முருகன் திரு அவதாரத்தின் தத்துவம். இறைவனின் நெற்றிக் கண்ணிலிருந்து புறப்பட்ட பேரொளிச் சுடர் வானத்தில் நின்று, பின் காற்றின் கையில் புகுந்து, தீயைச் சென்றடைந்து அங்கிருந்து கங்கையாகியநீரில் தவழ்ந்து, நிலத்தில் எய்தியது. ஞானக்கினியில் அருவமாகத் தோன்றிக் கருணைப் பொய்கையில் உருவமாகப் பொலிந்தது. அருவமான ஞானமயப் பரம்பொருள் பக்தர்களிடம் கருணைகொண்டே அன்றோ வடிவு கொள்கிறது?



தமிழ் மொழி என்றும் இளமை மாறாத மொழி. எம்பெருமான் முருகன், என்றும் அகலாத இளமையுடையவன். தமிழ் மொழியில் உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு; முருகப் பெருமானின் தோள்கள் பன்னிரண்டே. முருகனுக்குத் திருமுகம் ஒவ்வொன்றிலும் மூன்று கண்களாக மொத்தம் பதினெட்டு நயனங்கள்; தமிழில் மெய்யெழுத்துக்கள் பதினெட்டு. (சிவமூர்த்தி, உமா தேவி, விநாயகர், முருகன் யாவருமே முக்கண் பெற்றவர்கள்.) "ஷட்வக்த்ரம் த்வாதசபுஜம் அஷ்டாதச விலோசனம் ரூபம் அங்கிச்ருதம் கபம் லோகாதாம்" என்கிறது வடமொழி ஸ்காந்தம்.

"உருவம் இல்லாத அருட்பெருஞ் ஜோதி ஆண்டவன். ஆறு முகங்கள், பன்னிரண்டு தோள்கள், **பதினெட்டுக் கண்கள்** கொண்ட இந்த அருள் உருவத்தை உலகம் உய்யும் பொருட்டு எடுத்துக் கொண்டான்" என்பது இதனுடைய பொருள்.

சூரியன் ஆறு கண்களாகவும், சந்திரன் ஆறு கண்களாகவும், அக்கினி ஆறு கண்களாகவும் முருகப் பெருமானுக்குப் பதினெட்டுக் கண்களமைந்தாற்போல் தமிழில் மெய்யெழுத்துகள் பதினெட்டாக நின்றன. முருகவேளின் முகங்கள் ஆறு. தமிழில் இன எழுத்து ஆறு. வல்லினம் ஆறு, மெல்லினம் ஆறு இடையினம் ஆறு. மு—ரு—க என்ற எழுத்துக்களில் ஒவ்வொன்றும் மெய்யெழுத்தில் ஒவ்வோர் இனத்தைச் சார்ந்திருப்பதும் குறிப்பிடத் தக்கது. கந்தவேள் கரத்தில் உள்ள வேல் வேறு எந்தத் தெய்வத்துக்கும் இல்லாத சிறப்புடைய ஆயுதம். வேல் என்றே மக்கட்குப் பெயரிடுவது மரபு. இவ்வாறு வேறு ஆயுதத்தின் திருநாமங்களை மக்கட்கு இடுவதில்லை. வேறு எந்த மொழியிலும் இல்லாத தனி நிலை ஆயுத எழுத்து தமிழில்தான் உண்டு. ஆய்தம் ஃ; இச்சை, கிரியை, ஞானம் என்ற மூன்றும் மூன்று புள்ளிகளாகச் சேர்ந்தது. இது வேலின் உருவை யொத்தது.

**கண்ணிகர் மெய்யும் சென்னிக்**
**கணக்க நிலத்தின் கூறும்**
**திண்ணமை தோள்க ளேபோல்**
**திகழ்தரு முயிரும் வேறென்**
**றெண்ணுறத் தகிய தான**
**எஃகமும் இயலிற் காட்டும்**
**புண்ணிய முனிக்கோன் செவ்வேள்**
**பொற்பதத் தடிமையாகும்**

எனவே, முருகன் வேறு தமிழ் வேறு அல்ல. முருகனே தமிழ். தமிழே முருகன் என்பதை உணரலாம்.

பிறக்கும்போதே பெயருடன் யாரும் பிறப்பதில்லை. குழந்தை பிறந்த பின்னர்தான் பெயர் சூட்டுவர். ஆனால் இங்கோ, ''ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன்'' என்று கூறுகிறார். ஒருவரைப் பார்த்து, ''இவருக்கு ஞானம் உதித்தது'' என்று சொன்னால் அப்போதுதான் ஞானம் வந்தது என்று பொருளாகாது. ஞானம் முன்பே இருந்தது; அது மறைந்திருந்தது; இப்போது உதித்தது என்றுதான் பொருள்படும். ஆகவே, என்றும் இருக்கும் இறைவனே உலகம் உய்வதற்காகக் கிழக்கில் ஒரு முகமும், மேற்கில் ஒரு முகமும், வடக்கே ஒரு முகமும், தெற்கில் ஒரு முகமும், மேலே ஒரு முகமும், கீழே ஒரு முகமுமாக ஆறுமுகப் பெருமானாக வந்து உதித்தான்.

ஆண்பிள்ளை என்றும் ஆண்மகன் என்றும் கூற வல்ல ஒரே ஒருவன் முருகப் பெருமான். கோடீசுவரனின் பிள்ளையைக் கோடீசுவரன் மகன் என்றும், ஏழையின் பிள்ளையைத் தரித்திரன் மகன் என்றும், வைசியரின் மகனைச் செட்டி மகன் என்றும் சொல்லும் வழக்குப்படி பெண்ணுக்குப் பிறந்த நாம் யாவரும் பெண் — பிள்ளைகள்தான். ஆணுக்கே பிறந்த பிள்ளைதான் ஆண் பிள்ளை. அப்படிப் பெண் தொடர்பின்றி ஆணுக்கே பிறந்தவன் ஆறுமுக சுவாமி. பரமான்மாவை ஆணாகவும், அதைத் தேடிச் சென்றடைய வேண்டிய ஜீவான்மாவைப் பெண்ணாகவும் கொள்கிற மரபுப்படி இது கந்தப் பெருமானின் பிரம்ம நிலையைக் குறிக்கும்.

முருகன் அவதாரம் செய்தான் என்பதும் சரியாகாது. அவதாரம் என்றால் இறங்கி வருவது என்று பொருள். நாம் யாவரும் இறங்கு முகமாகக் கீழ் நோக்கி இவ்வுலகுக்கு வருகிறோம். முருகனோ இறைவனின் ஊர்த்துவ முகமாக நெற்றிக் கண்ணினின்று வெளிப் போந்தவன்.

சரவணப் பொய்கையில் திரு அவதாரம் செய்தருளிய முருகப் பெருமான் செந்தாமரையில் கொலுவிற்றிருந்தார். திருமால், பிரமதேவர், காலக் கடவுள், வருண பகவான் முதலிய தேவர்கள் அங்கே சென்றார்கள். கைக்குழந்தை போலத் திருவிளையாடல் புரியும் எம்பெருமானை அவர்கள் கண்டார்கள். வாக்கினாலும், வேத முடிவான உபநிடதங்களாலும் அளக்க முடியாத நிமல மூர்த்தியாக இருந்தாராம் எம்பெருமான்.



அழகிய திருமேனியுடன் வீற்றிருந்த முருகவேளின் ஆறுமுகங்களிலும் கருணை பொழிகிறது; நாராயண மூர்த்தி எம்பெருமானைப் பார்த்தார். எத்தனை முறை பார்த்தாலும் அவருக்குத் திருப்தி ஏற்படவில்லையாம்! ''எம்பெருமான் சரவணப் பொய்கையில் குழந்தை போல எழுந்தருளியிருக்கிறார்; நீங்கள் பாலூட்டுங்கள்'' என்று கார்த்திகைப் பெண்கள் அனைவருக்கும் தேவர்கள் உத்தரவு போட்டார்கள். ''அவ்வாறே செய்கிறோம்'' என்று கார்த்திகைப் பெண்கள் அறுவரும் சரவணப்பொய்கை சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் இளம்பூரணனைத் துதித்து வணங்கினர். கார்த்திகைப் பெண்களுக்குள் போட்டி ஏற்படாதபடி, குமரக் கடவுள் ஒருவரே ஆறு குழந்தைகளாகப் பிரிந்தருளினார்.

**உவகையோடு கிர்த்திகையர்**
**அறுவரும் எடுக்க அவர்**
**ஒருவர் ஒருவர்க்(கு) அவன்ஓர்**
**ஓர்புத்ர னானவனும்**

கார்த்திகை மகளிர் அறுவரும் ஆளுக்கொரு குழந்தையை எடுத்துப் பால் ஊட்டினார்கள். முருகப் பெருமான் முறுவல் செய்து, நீங்காத பேரருளால் அருந்துவது போல் அருந்தினார். பால் அருந்திய பரஞ்சுடர் முதல்வனை வண்டருந்தாத கஞ்சமா மலர்ச் சயனத்தில் சேர்த்த கார்த்திகை மாதர்கள் தாலாட்டிக் கண் வளரச் செய்தனர்.

**பாம்பா லுதத் தனைக்கடைந்து**
**படருங் கொடுங்கார் சொரிமழைக்கு**
**பரிய வரையைக் குடைகவித்துப்**
**பசுக்கள் வெருவிப் பதறுமற்**
**காம்பா லிசையின் ரேனியழைத்துக்**
**கதறுந் தமரக் காலிந்திக்**
**கரையின்ரைப் பின்னே நடந்த**
**கண்ணன் மருகா, முகையுடைக்கும்**
**பூம்பா சடைப்பங் கயத்தடத்திற்**
**புளிற்றுக் கவரி மூலைநேத்துப்**

**பொழியு மமுதந் தனைக்கண்டு**
**புனலைப் பிரித்துப் பேட்டெகினந்**
**தீம்பால் பருகுந் திருச்செந்தூர்ச்**
**செல்வா தாலோ தாலேலோ**
**தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த**
**சிறுவா தாலோ தாலேலோ**

பழுத்த வைணவராகிய பகழிக்கூத்தர் இவ்வாறு திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழில் முருகனைத் தாலாட்டுகிறார்.

'அமிருத மதனத்தின்போது பாற் கடலைக் கடைந்தவரும், பெருமழையின் போது கோவர்த்தனகிரியைக் குடையாகத் தூக்கி மாடுகளைக் காத்தவரும், வேணுகானமிசைத்து யமுனை தீரத்தில் ஆநிரையைப் பின்தொடர்ந்தவருமான பெருமானின் மருமகனே' என்று முதலில் துதிக்கிறார். பிறகு இவ்வாறு தொடர்கிறார்:

பொய்கையில் தாமரை மலர்கள் மலர்ந்திருக்கின்றன; அவற்றிலே அன்னங்கள் வாழ்கின்றன. உணவு தேடுவதற்காக ஆண் அன்னங்கள் வெளியே சென்றிருக்கின்றன. கன்று ஈன்று பத்துப் படி பால் கறக்கக் கூடிய எருமை ஒன்று அந்தப் பொய்கையில் இறங்கி ஒரு கலக்குக் கலக்கியது. பொய்கையில் இருந்த வரால் மீன் எருமையின் மடியை இடித்து மோதியது. கன்று தான் பாலைக் குடிப்பதாக நினைத்துக் கொண்டது எருமை! அதன் மடியிலிருந்து பால் சுரந்தது. எருமையின் மடியிலிருந்த பத்துப் படி பாலும் நீரில் கலந்து விட்டது. நீர் வேறு, பால் வேறாகப் பிரிக்கும் ஆற்றல் அன்னத்துக்கு உண்டு. 'நம் கணவன்மார்களாகிய ஆண் அன்னங்கள் உணவு தேடி எங்கோ போயிருக்கின்றன. எம்பெருமானே உணவை இங்கேயே கொண்டு வந்து கொடுக்கிறார்' என்று பெண் அன்னங்கள் நீரிலிருந்து பாலைப் பிரித்து எடுத்துப் பாதியைக் குடித்து மறு பாதியைக் கணவருக்கு என்று வைத்து விட்டனவாம். (அவை பழங் காலத்து அன்னங்கள்!) இவ்வாறு அன்னங்கள் வாழும் தீர்த்தமுள்ள திருச்செந்தூரில் வாழும் செல்வனைத் தாலாட்டுகிறார் பகழிக்கூத்தர்.

கார்த்திகைப் பெண்கள் திருக்குழந்தைகளைத் துயிலச் செய்தனர். ஒரு முருகக் குழந்தை தூங்கும். ஒரு முருகக் குழந்தை எழுந்து ''சிவா'', ''சங்கரா'' என்று மழலைச் சொல் பேசும். ஓர் உருவம் மாதாவின் பாலைச் செம்பவள வாய் வைத்து உண்ணும்; ஓர் உருவம் சிரிக்கும்; ஓர் உருவம் விளையாடும்; ஓர் உருவம் காரணமின்றி அழுது கொண்டிருக்கும்; ஓர் உருவம் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கும்; ஓர் உருவம் தளர்நடை இட்டுச் செல்லும்; ஓர் உருவம் நிற்க முடியாமல் எழுந்து விழும்; ஓர் உருவம் பாட்டுப் பாடும்; ஓர் உருவம் கைகளைக் கொட்டும்; ஓர் உருவம் கூத்தாடும். ஓர் உருவம் செங்கை கொட்டும்; ஓட ஓர் உருவமும், ஓரிடத்தில் ஒளிக்க ஓர் உருவமும், அப்படி ஒளித்த மகவைத் தேட ஓர் உருவமும் கொண்டு ஆறு குழந்தை உருவங்களும் திருவிளையாடல் புரிந்து வளர்ந்தன.

**துயில ஓர் உருவம்; துஞ்சித்**
**துன்னென எழுந்து மென்சொல்**
**பயிலஓர் உருவம்; யாய்தன்**
**பயோதரம் பவளவாய் வைத்து**
**அயிலஓர் உருவம்; நக்காங்கு**
**அமரஓர் உருவம்; ஆடல்**
**இயலஓர் உருவம்; வான**
**இரங்கஓர் உருவம் செய்தான்**

**ஆடஓர் உருவம் செங்கை**
**அறையஓர் உருவம் நின்று**
**பாடஓர் உருவம் நாடிப்**
**பார்க்கஓர் உருவம் ஆங்கண்**
**ஓடஓர் உருவம் ஓர்பால்**
**ஒளிக்கஓர் உருவம் யாண்டுந்**
**தேடஓர் உருவ மாகச்**
**சிவன்மகன் புரிந்த ஞூற்குன்**

இப்படியாக, என் அப்பன் ஒருவனே பல உருவாகி விளையாடிக் கொண்டிருந்தான். சிற்பரனாகி வந்த செவ்வேளது திருவிளையாடலின் திறத்தை நோக்கியே அரி அயனாதி அமரர்கள் ஆனந்தமடைந்து, ''இவ்வொரு பாலகரே பல சிறுவர் வடிவம் கொண்டு புரியும் திருவிளையாடல் எங்களாலும் அறிய முடியாதது. கைக்குழந்தை போல் தோன்றிய இக் குமரக் கடவுள் செய்யும் மாயை போல் செய்ய வல்லார் எவரும் இல்லை. ஆகவே, இவர் ஒப்புயர்வில்லாச் சிவபெருமானேயாம்'' என்று கூறி வணங்கி நின்றார்கள். (தொடரும்)



## காட்சி — 1

*சுரேஷ்:* அப்பா, அப்பா! உங்களுக்குச் சேதி தெரியுமா?

*சங்கரன்:* என்னடா விஷயம்?

*சுரே:* நம்ப உள்நாட்டு இலாகாவிலிருந்து இன்றைக்குக் காலையில் ஓர் அவசர உத்தரவு பிரகடனம் ஆகி யிருக்கிறது. அது இருபத்தி நாலு மணி நேரத்துக்குள்ளே அமுலுக்கு வருகிறதாம்!

*சங்:* அப்படி என்னடா அவசர உத்தரவு? 'பிரஸ்'ஸில் ஒரு நியூசும் வந்த மாதிரி தெரியல்லியே!

*சுரே:* 'பிரஸ்'ஸுக்கு எல்லாம் வராது. அது! நம்ப வீட்டை மட்டும்தான் 'பிரஸ்' பண்ணும்.

நம்ப 'ஹோம்மினிஸ்டர்' அம்மாதானே அதைப் பிறப்பிச்சிருக்கா!

*சங்:* உங்கம்மாவாடா?

*சுரே:* அம்மா பெயரைச் சொன்னபிறகு தான் அப்பாவுக்குத் திடீரென்று உதறல் வருகிறது.

*சங்:* 'திடீர் உதறல்' ஒன்றும் இல்லேயடா, பதினேஞ்சு வருஷ அனுபவ உதறல்! ஆமாம், என்ன உத்தரவு போட்டிருக்கா?

*சுரே:* நம்ப உணவு மந்திரி இருக்கிறள் இல்லே....

*சங்:* ஆமா, சமையல்காரி சாந்தம்மா....

*சுரே:* அவளுக்குத் திடீர்னு கல்தா கொடுத்தாச்சு.

*சங்:* ஏன்?

*சுரே:* அதெல்லாம் அம்மாகிட்டே ரஷ்ய பாணிதான். கல்தான்னு கல்தாதான்! காரணம் கேட்கப்படாது.

*சங்:* அப்போ சமையல்.....?

*சுரே:* உணவு இலாகா, உள் நாட்டு இலாகாவுடன் இணைக்கப்படுகிறது. அம்மாவே உணவையும் கவனிக்கிறள்!

*சங்:* ஆ, அம்மா சமைக்கப் போகிறளா! சமையலுக்கும் அவளுக்கும் என்னடா சம்பந்தம்? அவளைப் பெண் பார்க்கும்பொழுது, அவள் செய்ததாகச் சர்டிபிகேட்டோடு வந்த சொஜ்ஜியைத் தின்று விட்டு 'நான்கு நாட்களாக வயிற்றுவலியிலேயே கிடந்து, அதற்கப்புறம் அவள் சமையல் பானையைத் தொடக் கூடாதென்று தேவர், மூவர் அறிய, அக்னி சாட்சியாக வாக்குறுதி வாங்கிக் கொண்டு தானே, கல்யாணம் பண்ணிக் கொண்டேன்!

*சுரே:* இது ஜனநாயக நாடப்பா! வாக்குறுதிகள் வழங்குவதெல்லாம் ஒரு காரியம் நடைபெறும் வரையில்தான். அம்மா வாக்குறுதியும் அப்படித்தான்!

*சங்:* இப்ப என்னடா பண்ணறது? உங்க அம்மா அடுக்களைக்குள்ளே புகுந்து கரண்டியைப் பிடிக்கட்டான்னு, காஷாயம் கட்டிண்டு வெளியே கிளம்பிட வேண்டியதுதான்!

*சுரே:* ஓஹோ, பழைய காலம்னு காஷாயத்தை நினைக்கிறீங்களோ? இப்ப காஷாயத்தில் உணவுப் பிரச்னை தீராது. இன்றைக்குச் சாட்சாத் பரமசிவனே புலித்தோலைப் போர்த்திக் கொண்டு பிச்சைக்கு வந்து நின்றாலும், 'போமய்யா, போய்க் குடும்பக் கார்டு அதிகாரிகிட்டே அட்டை வாங்கிக் கடையிலே வாங்கிக்கொள்ளும்' என்று சொல்ல வேண்டிய நேரம். வீட்டுக்குள்ளே இருந்துதான் சமாளிக்க ஆகணும்.

*சங்:* எப்படிச் சமாளிக்கிறது என்று எனக்குத் தெரியல்லியே!

*சுரே:* நம்ப ஆலோசனைக் கமிட்டியை ரகசியமாகக்கூட்டி முடிவெடுக்கவேண்டியதுதான்.




*சங்:* அதுதான் சரி. உன் அம்மா அடுத்த வீட்டுக்கு அரட்டை அடிக்கப் போகிற சமயம் நம்ப கமிட்டி அங்கத்தினர்களான தாத்தா, பாட்டி எல்லாரையும் கொல்லைப் பக்கமாக ரகசியக் கூட்டத்துக்கு அழைத்து வா.

*சுரே:* கொல்லைப் பக்கமா எதுக்கு? ஓஹோ, நம்ப மீட்டிங் நடக்கும் போது திடீர்னு அம்மா வந்துட்டா, கொல்லை வாசல் வழியா ஆளுக்கு ஒரு பக்கம் கலபமாக ஓடி மறைந்துகொள்வதற்கு வசதியாகவா, சரி!

## காட்சி — 2

*[ரகசியக் கூட்டம் நடக்கிறது. சங்கரன், சுரேஷ், தாத்தா, பாட்டி, வேலைக்கார முனியன் ஆகியோர் கலந்து கொண்டிருக்கிறார்கள்.]*

*சங்:* இப்போ, நாம எல்லோரும் யோசிக்க வேண்டியது என்ன வென்றால்....

பாட்டி (குறுக்கிட்டு): இந்தாப்பா, நான் விஷயத்தை ஒரே வார்த்தையிலே சொல்லிட றேன். நீங்க எதை யோ சிச்சாலும் சரி

யோசிக்கா விட்டாலும் சரி. சாந்தம்மா கையிலே கரண்டி ஏறினால்தான் எனக்கு இனி மேல் இந்த வீட்டில் சாப்பாட்டுப் பிராப்தம்! இல்லேன்னு பட்டினி கிடந்து பிராணத் தியாகம் பண்ண வேண்டியதுதான்!

கரே: பாட்டி! நீ பிராணத் தியாகம் பண்ணணும்னால், அதுக்கு ஏன் பட்டினி கிடந்து கஷ்டப்படணும்? அம்மா சமையலை ஒரு வேளைக்கு இருவேளை சாப்பிட்டால் போதுமே!

சங் (உற்சாகத்துடன்): அம்மா! நீ சொன்ன மாதிரி செய்கிறதுதான் அருமை யான யோசனை!

பாட்டி: என்னடா, பட்டினி கிடந்து உயிரை விடறதா அருமையான யோசனை? என் உயிரைப் போக்குவதற்குத்தான் உன் சம்சாரத்தை ஏவி விட்டுச் சாந்தம்மாவை விரட்டினயா ?

சங்: அட, நீ என்னம்மா! நீ உயிரை விட வேண்டாம். பட்டினி கிடந்தால் போதும். அதுவும் அடுக்களை வாசலில் உட்கார்ந்துவிடு. நாங்க உடனே, 'சாந்தம்மாவுக்கு வேலே கொடு. இல்லேயேல், சாகும் வரையில் உண்ணு விரதம்' என்று போராட்டம் ஆரம்பித்து விடுகிறோம்.

போக்கிடம் இல்லாதவன் அல்ல. ...ணடி ஆள். அவனுக்கு இந்த மடம் இல் ...டி, சந்தை மடம்!

சங்கரன், தாத்தா, பாட்டி: அவ...தான் சரியான ஆள் !

முனியன்: என்ன சாமி, என் ...மரை இழுக்கிறீங்க? சந்தை மடத்தைச் ...ட்டி இந்த மடத்தை விட்டுக் கிளப்பிப் ...ழைப் பைக் கெடுக்கப் பார்க்கிறீங்களா?

சங்: உன் பிழைப்புக்கு நான் கியாரண்டி.

முனி: என்ன செய்யச் சொல்றீங்க?

சங்: வேறு ஒன்றும் இல்லே. சாந்தம்மா வும் நீயும் சக ஊழியர்கள்தானே, அவ ளுடைய வேலேநிறுத்தத்துக்கு அநுதாபமா நீயும் வேலேநிறுத்தம் செய்யணும்.

முனி: உங்க பேச்சைக் கேட்டு நான் வேலே நிறுத்தம் செய்யப் போக, அம்மா வேலையை விட்டு எடுத்திட்டாங்கன்னு என்ன பண்ணறது?

சங்: அதெல்லாம் நாங்க விட்டு விடு வோமா....?

முனி: நீங்க என்ன பண்ணுவீங்க? அம்மா வுக்குத் தெரியாமல் இப்படிக் கொல்லேப்புறம் மீட்டிங் போடுவீங்க! வேறு என்ன செய்வீங்க?



பாட்டி: ஏம்ப்பா, போராட்டம் அது இதுன்னு என்னே முன்னே தள்ளி அவளிடம் வசவு வாங்கிக் கட்டிக்கச் சொல்றியா? நீயே அதைச் செய்.

சங்: என்னம்மா, எங்கிட்டே கையைக் காட்டறே! நமக்குள் வீரமும், தைரியமும் உள்ள மகாபுருஷர் அப்பா ஒருத்தர்தான். அவரே போராட்டத்துக்குத் தலைமை வகிக் கட்டுமே !

தாத்தா: ஏண்டாப்பா, எனக்கு வீரப் பட்டம் கட்டி விழுத்தப் பார்க்கிறியா ? அதெல்லாம் முடியாது. நானும் உங்கம்மா வும் எங்க பொண்ணு வீட்டுக்குப் போயிட றோம். உனக்காச்சு, உங்க வீட்டுக்காரிக்காச்சு!

சங்: என்னப்பா, இப்படி ஆலோசனைக் கமிட்டி அங்கத்தினர்களே அட்ரசை விட்டு ஓட ஆரம்பித்தால் எப்படி? ம். நம்ப வீட் டிலே கமலத்தைத் தைரியமாய் எதிர்க்க ஓர் ஆள் இருந்தால் யோசிக்கலாம்.

கரே: நம்ப வீட்டிலே அம்மாவுக்குப் பயப் பட வேண்டிய அவசியமில்லாத ஒரே ஆசாமி, முனியன்தான். ஏன்னு, அவன் நம்ப மாதிரி

எல்லாவற்றுக்கும் மீறி, என் பிழைப்பு கெட்டு, ஒரு மாதமோ இரண்டு மாதமோ வேலே இல்லாமல் போனுல் என்ன பண்ணறது? எந்தப் 'பிடிதர'த்தை நம்பி இறங்குவது?

சங்: என்ன 'பிடிதரம்' வேணும்கிறே ?

கரே: அவன் அடி போடறது தெரியல் லேயா? 'பிடி இந்தா'ன்னு இரண்டு மாசச் சம்பளத்தைக் கியாரண்டியாகக் கொடுத்தால் அவனுக்குப் 'பிடிதரமா'த் தெரியும் போல் இருக்கு !

தாத்தா: செய்யட்டால் போகிறது! என் பென்ஷன் பணத்திலிருந்து வேணும்னாலும் நான் கொடுக்கிறேன். உன் வீட்டுக்காரி அடுக்களைப் பக்கம் போகாதிருந்தால்போதும்!

கரே: தாத்தா! உங்க பென்ஷனிலிருந்தா கொடுக்கிறீங்க, ஆச்சரியம், அதிசயம்!

தாத்தா: என்னடா?

கரே: இல்லே, போன தீபாவளியன்று உங்களிடம் நாலணு இரும் வாங்க முனியன் றமுறங்கையையும் கழுத்தையும் சொறிந்த சொறிச்சலுக்கு ஒன்றரைப் பாட்டில் 'டெட் டால்' போடும்படியாச்சு ! அப்பவும்

பைசா ஜெம்பலில்லே. இப்ப ஜெம்புது. ஔவையார் மட்டும் இப்ப இருந்தால், 'கன்னக்கோல் கள்ளனுக்கும் ஜெம்பாத தாத்தா பென்ஷன் கமலம்மா கரண்டிக்குக் ஜெம்பும்' என்றுதான் பாடியிருப்பாள்!

### காட்சி — 3

கமலம்மாள்: என்னங்க, முனியன் என்ன சொல்றான்னு காதில் விழுந்ததா?

சங்: இந்த வீட்டில் உன் குரல் ஒலிக்கிற போது, வேறு யார் சொல் காதிலே விழும்?

கம: கிண்டலா பண்ணறீங்க? வீட்டுக்குள்ளே இப்படி வக்கிர புத்தி உள்ளவங்க இருக்கிறபோது வேலைக்காரன் ஏன் எதிர்த்து நிற்க மாட்டான்? அவன் ஸ்டிரைக் பண்ண றானாம் ஸ்ட்ரைக்!

சங்: என்னது, முனியன் உன்னை எதிர்த்தா ஸ்ட்ரைக் பண்றான்? உன்னையே எதிர்த்துட்டானா? ஆகா, ஜனாதிபதிகிட்டே வீரச் சக்கரம் வாங்க வேண்டிய பயல்!

கம: சமத்காரமா பேசிப்பிட்டாப்பிலே நெனைப்போ? உடனே அவனைத் தூக்கி வெளியே எறிஞ்சுட்டு மறு வேலை பாருங்கள்!

சங்: ஏன்?

கம: ஏன், சாந்தம்மாவை வேலையை விட்டுத் தள்ளிட்டேன் இல்லே?

சங்: ஆங், அது ஏன்?

கம: என்ன 'ஏன்'னுகிட்டு! அதெல்லாம் உங்களுக்கு எதற்கு? அவளை எனக்குப் பிடிக்கல்லே, தள்ளி விட்டேன். இப்போ இவன் வம்பு பண்ணறான். இவனையும் தள்ளியாச்சு. இரண்டு பேர் கணக்கையும் தீர்த்து வெளியே அனுப்புங்க.

சுரே: ஐயகோ! 'இம்' என்றால் சிறை வாசம்! 'ஏன்' என்றால் வெளியேற்றம்! கொடுமை, ஒழிக, இந்தத் துக்ளக் தர்பார்!

கம: டேய், சும்மா இருக்க மாட்டே!

சங்: கமலம், அவசரப்படாதே. வேலையிலிருந்து நீக்கறதுன்னா, சும்மா இலேசா? நானே முனியனைக் கூப்பிட்டுக் கேட்கிறேன். டேய், முனியா இங்கே வா!

முனி (வந்து கொண்டே): அங்கே என்ன சார், வரது? நான் நேரே லேபர் கோர்ட்டுக்குப் போய்க் கொள்கிறேன்! சட்டம் இருக்கு, சார், சட்டம்! 'ஸ்டிரைக்' பண்றது எங்க ஜீவாதார உரிமை!

கம: ஒரேயடியாக ஸ்டிரைக் பண்ணு. திரும்பி வராதே!

முனி: சும்மா வராதேன்னு சொன்னால் கேட்பேனா? மூன்று மாதச் சம்பளத்தோட சொல்லுங்க! எனக்கு மட்டுமில்லே, சாந்தம்மாவுக்கும் கொடுக்கணும். இல்லேன்னா.....

கம: என்னடா, பண்ணுவே?

முனி: இல்லேன்னா, இன்னிக்கு ஸ்ட்ரைக், நாளைக்கு மறியல், அடுத்த நாள் ஊர்வலம், அதற்கு அடுத்த நாள் உண்ணாவிரதம்! ....

சங்க: முனியா நிறுத்து, நிறுத்து! நமக்குள்ளே எதுக்கப்பா விவகாரம்? நான் சமாதானமா முடிக்கிறேன். கொஞ்சம் வெளியே இரு. (முனியன் வெளியே போகிறான்) கமலம், சும்மா கௌரவம் பார்க்காதே! இரண்டு பேரையும் வேலையில் சேர்த்துக் கொள்வோம்! லேபர் கோர்ட் அங்கே இங்கேன்னு போனால் பெரிய வம்பாகும்.

கம: உங்களுக்கு வெட்கமாயில்லே? ஒரு வேலைக்காரனை அடக்க வழியில்லாமல் சமாதானம் பேசறீங்களோ, சமாதானம்! உடனே இரண்டு பேரையும் வெளியே அனுப்பணும்!

சங்: உடனே அனுப்பறதுன்னா மூன்று மாசச் சம்பளம்னு கொடுத்தாகணும்!

கம: கொடுங்க.

சங்: அப்படி ஏன் தண்டமாக் கொடுக்கணும்?

கம: அவன் வேலையிலே இருந்தாலும் கொடுப்போமில்லே, அதை மொத்தமாக் கொடுத்து விட்டு அந்தப் பணம் ஈடாகும் வரை முனியன் வேலையை நீங்க பாருங்க! சமையலே நான் கவனிக்கிறேன். உடனே கணக்குத் தீர்த்து வையுங்க. நான் பக்கத்து வீடு வரையில் போயிட்டு வர்றேன்! (போகிறாள்).

சுரே: என்னப்பா, அப்படி மிரண்டு உட்கார்ந்துட்டீங்க?

சங்: இரண்டு பாணத்தாலே தாக்கிட்டாளேடா! முனியன் உத்தியோகம் என் தலையில் அபிஷேகம் ஆனது ஒரு பாணம்; அவள் சமையல் ஒரு பாணம்! தாத்தா பாட்டி யெல்லாரும் எங்கேடா?

சுரே: அதோ, எல்லாவற்றையும் மறைந்து இருந்து கேட்டுவிட்டு வெளியேறி வராங்களே.

[ தாத்தாவும் பாட்டியும் வருகிறார்கள் ]

சங்: பார்த்தீங்களாப்பா, கதையை மாற்றிவிட்டாளே! மூன்று மாசச் சம்பளம் என்றால், பயந்துபோயிடுவான்னு பார்த்தோமே, இப்ப பணம் நஷ்டத்துக்கும் சம்மதிச்சுட்டாளே!

பாட்டி: அவ ஒன்றும் பண நஷ்டத்துக்குச் சம்மதிக்கல்லேடா! நஷ்டத்தை ஈடுகட்டத் தான் உன்னை வேலை செய்யச் சொல்லிட்டாளே! அவ சாமர்த்தியம் யாருக்கு வரும்?

சுரே: என்ன இது, அம்மா பக்கம் ஸ்ட்ராங் ஆனதும், பாட்டி 'டிமீர்'னு பல்டி அடித்து அந்தப் பக்கம் சாய்கிறாளே!

தாத்தா: அவள் பிழைக்கத் தெரிஞ்சவள். என்னை மாதிரியா? என் பென்ஷன் பணத்திலிருந்து ஐம்பது ரூபாயைக் கொடுத்துவிட்டு முழிக்கிறேன், பாரு! இப்போ சாந்தம்மா சமையலும் போச்சு, பணமும் போச்சு!

சங்: பணம் ஏம்பா போகுது? முனியனைத் தாஜா பண்ணிக் கமலத்திடம் மன்னிப்புக் கேட்க வைத்து எல்லாவற்றையும் சமரசமாக முடித்து விடலாம். டேய் சுரேஷ், முனியனைக் கூப்பிடு.

[ அச்சமயம் முனியன் வருகிறான். ]

முனி: நான் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதான் வருகிறேன். என்னையா மன்னிப்புக் கேட்கச் சொல்றீங்க? எங்க தாத்தாவுக்குத் தாத்தா யாரு தெரியுமா?

சங்: யாரு?

முனி: பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மு நாயக்கர் இருந்தாரே, அவரு வீட்டிலே வேலை பார்த்துக்கிட்டிருந்தவரு. எங்க பரம்பரைக்கே மன்னிப்புக் கேட்கத் தெரியாது!

சங்: டேய், நீ வேறு சமயம் பார்த்து உருட்டறயா? மரியாதையா அப்பாகிட்டே வாங்கின பணத்தைக் கொடுத்துடு!

முனி: என்ன சாமி, விளையாடறீங்க! என் பிழைப்பையும் கெடுத்திட்டுப் பணத்தையும் கேட்கிறீங்களே!




"மான்ஸ்பீல்டு" நேஷனல்-எக்கோ ரேடியோக்களின் அமைப்பு, மேன்மையான உறுப்புகள், உழைப்பின் தரம் இவற்றோடு இதர ரேடியோக்களின் அம்சங்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள். நேஷனல்-எக்கோ தான் உங்கள் பணத்துக்கு ஏற்ற மதிப்பு தருகிறது என்பதை நீங்களே ஒப்புக்கொள்வீர்கள். நேஷனல்-எக்கோ ரேடியோக்கள் உஷ்ணப் பிரதேச கால நிலைகளால் பாதிக்கப்படாதபடி அதன் உறுப்புகள் பாதுகாக்கப்பட்டுள்ளன; அதனால்தான் இவை நீடித்து உழைக்கின்றன. உங்கள் அருகில் உள்ள நேஷனல்-எக்கோ வியாபாரியிடம் இன்றே சென்று இவற்றை இலவசமாக இயக்கிக் காட்டச் சொல்லுங்கள்!

மாடல் 806 :
6 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள்,
அழகிய பெட்டி.
மாடல் U-806 ஏஸி/டிஸி ஸெட்.
மாடல் A-806 ஏஸி ஸெட்.
ரூ. 395.00

விலைகள் எக்ஸைஸ் டியூடி உள்பட வரிகள் தனி

**நேஷனல் எக்கோ**

மான்ஸ்பீல்டு ரேடியோ

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்
பம்பாய் . கல்கத்தா . பாட்னா . மதராஸ் . பெங்களூர் . டில்லி . ஹைதராபாத்   JWT GRA 31

சங்: அதெல்லாம், ஒன்றும் செல்லாது. பணத்தைக் கொடுத்து விட்டுப் போ!

முனி: அப்படியா சேதி? போகிறதோ, போகிறேன். நீங்க எல்லாம் அம்மாவுக்கு எதிராகச் சதி பண்ணினதை அம்மாவிடம் சொல்லி விட்டுப் போகிறேன்!

தாத்தா: ஐயையோ, வேண்டாம்ப்பா! வயசான காலத்திலே எங்களுக்கு ஏன் அவகிட்ட கெட்ட பேரு. பணம் போனாலும் போகிறது. அவகிட்டே ஒன்றும் சொல்லாதே! சங்கரா, மூன்று மாதச் சம்பளம் இருநூறே, முந்நூறே வரும். கொடுத்துடு.



"அடுப்பிலே என்ன எரியுது? ஒரே புகைச்சல் நாற்றம்...!"

சங்: என்னப்பா இப்படிச் சொல்றீங்க?

தாத்தா: பிறகு என்ன செய்வது? தெரியாத்தனமா இந்தப் பயலே நம்பினோம். அவன் சமயம் பார்த்துக் கழுத்தை அறுக்கிறான். நீயாவது பகல் நேரத்தை ஆபீசிலே கழிச்சுத் தப்பிச்சுடுவே. நானும் உன் அம்மாவும் வீட்டிலே இருந்து தொலைக்கணும். கமலத்துக்கிட்டே இந்தப் பய பகையை மூட்டிட்டான்னு அவ சதா அக்கினியாஸ்திரத்தைத் தொடுத்துக் கொண்டிருப்பாள்.

சங் (பணத்தை எடுத்து வந்து): சனியனே! இதை வாங்கிக் கொண்டு தொலே!

[ அச்சமயம் கமலம் நுழைகிறாள்.]

கம (சிரித்துக் கொண்டே): கொடுக்கிற பணத்தை அவனுக்குச் சந்தோஷமாகக் கொடுக்கக் கூடாது? என்ன முனியா, பணத்தை வாங்கிட்டியா?

முனி (கரங்களைக் கூப்பி அவளை நோக்கிக் கும்பிட்டவாறு): அம்மா! உங்க தயவாலே பணத்தை வாங்கிட்டேன். சாந்தம்மா, வா! அம்மா காலிலே விழுந்து ஆசீர்வாதம் வாங்கிக் கொள்வோம்! அம்மா எங்களை ஆசீர்வாதம் பண்ணுங்க!

[ கமலம் காலில் அவர்கள் இருவரும் விழுந்து வணங்குகிறார்கள்.]

கம (ஆசீர்வதித்தவாறு): நீங்க இரண்டு பேரும் பதினாறும் பெற்றுப் பெரு வாழ்வு வாழணும்!....ம் எழுந்து பெரியவங்கிட்டேயும் ஆசீர்வாதம் வாங்கிக்கிங்க!

சங் (திகைப்புடன்): என்ன கமலம்! இத்தனை நேரம் தாம் தூம் என்றாய். இப்போ அவர்கள் உன் காலில் விழுகிறதும், நீ ஆசீர்வாதம் பண்ணுகிறதும், என்ன விஷயம்?

கம (சிரித்துக் கொண்டே): எல்லாம் கல்யாண விஷயம்தான். அதுக்குத்தானே நீங்க அவங்களுக்குப் பணம் கொடுத்திருக்கீங்க! மாமாகூட அவர் பென்ஷனிலிருந்து ஐம்பது ரூபாய் கொடுத்திருக்கிறார்.

சங்: கல்யாணமா, யாருக்கு?

கம: முனியனுக்கும் சாந்தம்மாவுக்கும் தான்! உங்களிடம் கல்யாணச் செலவுக்குப் பணம் வாங்கத்தான் இந்த நாடகம்!

சங்: நாடகமா?

கம: ஆமாம்; நாடகம் தான். சமையலில் கை வைத்தால்தான் நீங்கள் உடனே அசைவீர்கள் என்று சாந்தம்மாவை நீக்குவதாக நடித்தேன். அவளை வேலையில் அமர்த்த நீங்க பண்ணுகிற சதிக்கு ஒத்தாசை பண்ண, சுரேஷையும் முனியனையும் ஏவி விட்டேன். கடைசியில் நான் உங்களுக்கு விட்டுக் கொடுக்காமல் நெருக்கவே, ரகசியத் திட்டம் போட்ட தோஷத்துக்காக முனியனிடம் மெல்லவும் முடியாமல் துப்பவும் முடியாமல் பணத்தைக் கொடுக்கும்படியாயிற்று.

சங்: சுரேஷ்! உனக்கு முந்தியே தெரியுமா?

சுரேஷ்: ஓ. தெரியுமே! எல்லாம் அன்னையின் ஆணை!

சங் (ரோஷத்துடன்): என்ன சுத்தப் பேத்தல்! கல்யாணத்துக்கு என்று கேட்டால் நான் கொடுத்திருக்க மாட்டேனா?

கம: இப்பத்தான் சொல்வீர்கள்! போன தீபாவளி சமயத்தில் நான் எவ்வளவோ சொல்லியும் அவர்களுக்கு ஒரு சீட்டித் துணி கொடுக்க உங்களுக்கு மனம் வந்ததா?

முனி: அம்மாதான் எங்க கண் கண்ட தெய்வம்! கண்டிப்பாக நடந்து கொண்டாலும், அவங்கதான் கருணை பண்ணுவாங்க! மங்கள காரியம். எல்லாரும் ஆசீர்வாதம் பண்ணுங்க.

சுரே: பாவம், தாத்தாவே ஏமாந்தது தான் எனக்குப் பாவமா இருக்கு.

தாத்தா (சமாளித்துக் கொண்டு): நான் எங்கடா ஏமாந்தேன்? என் மருமகள் கமலத்தை எனக்குத் தெரியாதா என்ன? அவள் நோக்கம் 'இப்படித்தான் இருக்கும்' என்று நினைத்து 'நம்ப ஆசீர்வாதமா யிருக்கட்டுமே' என்று பணத்தைக் கொடுத்தேன்.

சுரே: தாத்தான்னு தாத்தாதான்! பிரமாதமாச் சமாளித்து அம்மா பக்கம் ஒட்டிக் கொண்டாரே!

பாட்டி: டேய், சுரேஷ்! நான் உன்கிட்டே அப்பவே சொல்லலே, என் கமலத்தின் சாமர்த்தியம் யாருக்கும் வராது என்று!

சுரே: அடி சக்கை! பாட்டியும் ஒட்டியாச்சு! பாவம், அப்பாதான் நிராயுத பாணியா, தனியாக நிற்கிறார்!

சங்: என்னடா, 'தோல்வி, 'வெற்றி' என்று உளறுகிறே! நான் ஜெயித்தால் என்ன, என் மனைவி ஜெயித்தால் என்ன?

சுரேஷ் (கைதட்டிக்கொண்டு): ஹேய்யா! இப்போ அப்பா அடித்த பல்டிதான் இன்டர் நேஷனல் ரெக்கார்டு பிரேக்கிங் பல்டி!

[எல்லாரும் சிரிக்கிறார்கள்.]

# நங்கையர் செய்யும் நற்பணிகள்

கெட்டிவிட் என்ற பிரமுகர் அயல் நாட்டில் மாதர்சங்கக் கூட்டமொன்றில் கூறினார்: ''நான் மாதர்களுக்குப் பிரசங்கம் செய்யவே விரும்புகிறேன். நான் ஆடவர்களுக்குக் கரடியாகக் கத்தினாலும் அவர்கள் ஒரு காதில் வாங்கி மறு காது வழியாக அதை உடனே விட்டு விடுகிறார்கள். ஆனால் பெண்மணிகளுக்குச் செய்யும் பிரசங்கம் வீணாவதில்லை. அவர்கள் காதுகள் இரண்டுக்குள்ளும் புகுந்து பிறகு வாய் வழியாகவும் செயலாகவும் பரிணமிக்கிறது!''

அதனால்தானோ என்னவோ அந்தக் காலத்தில் மகாத்மா காந்தி ஒரு கன்னியா ஆசிரமம் நிறுவி, சமூக சேவை செய்ய ஒரு பெண்மணியைத் தேர்ந்தெடுத்தார் போலும்! அந்தப் பாக்கியம் பிரபல வழக்கறிஞர் திரு எஸ். சீனிவாசய்யங்கார் அவர்களின் புதல்வியும் சமூக சேவையில் ஊறித் திளைத்த திரு வி. பாஷ்யம் அய்யங்கார் அவர்களின் பேத்தியுமான ஸ்ரீமதி அம்புஜம்மாளுக்குக் கிடைத்தது. அன்னையின் ஆசை நிறைவேறாமல் போகுமா? சென்னை மயிலாப்பூரில் ஸ்ரீமதி அம்புஜம்மாளின் பெருமுயற்சியினால் சமூக சேவைக்கு எடுத்துக் காட்டாக 1948-ம் வருஷம் சீனிவாச காந்தி நிலயம் தொடங்கப்பெற்றது.

சீனிவாச காந்தி நிலயத்தின் வளர்ச்சிக்கு இரண்டு வகை அதிர்ஷ்டங்கள் தாமாகவே வாய்த்துள்ளன. பிரபல எழுத்தாளர் ஸ்ரீமதி வசுமதி ராமசுவாமியும், தென்னகத்தில் போக்குவரத்துத் துறையில் முன்னணியில் நிற்கும் டி. வி. எஸ். குடும்பத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி பத்மா சந்தானமும் செயலாளர்களாக இருந்து கவனித்து வருவதால் இந்தச் சங்கம் முன்னேற்றப் பாதையில் செல்வதில் அதிசயமில்லை.

பதினாறு வருஷங்கள் இடையறாது சேவை செய்து வரும் பாரதத்தின் இருபணிப் புதல்வர்களின் நினைவைப் போற்றும் சீனிவாச காந்தி நிலயத்தின் பணிகளைத் தெரிந்து கொள்வதில் நம் எல்லோருக்கும் ஆவல் இருப்பது இயல்புதானே? இதோ நம்மை அழைத்துச் செல்ல ஸ்ரீமதி வசுமதி ராமசுவாமி வந்துவிட்டார்கள்.



ஸ்ரீமதி அம்புஜம்மாள்



ஸ்ரீமதி வசுமதி ராமசாமி



ஸ்ரீமதி பத்மா சந்தானம்

''வாருங்கள். இது தான் எங்கள் பிரார்த்தனைக் கூடம். இந்தச் சங்கத்தில் பிரார்த்தனையுடனேதான் எல்லா வேலைகளுமே தொடங்குகின்றன'' என்று கூறிச் சீனிவாச காந்தி நிலயத்துக்குள் நம்மை இட்டுச் செல்கிறார்கள். தெய்வீகக் களையுடன் துலங்கும் இந்த மண்டபத்தில் நுழைந்ததுமே நம்மையறியாமல் பக்தி பரவசத்தில் ஆழ்கிறோம்.

''அண்ணல் பிரார்த்தனை செய்கையில் மறைந்த வருஷத்திலே எழுந்துள்ள இந்த நினைவுச் சின்னத்தில் பிரார்த்தனைக்கு முதலிடம் தருவதில் அதிசயம் ஒன்று மில்லையே'' என்று கூட வந்தவர் மொழிந்தார்.

ஸ்ரீமதி வசுமதிக்கு நாம் கேள்வி கேட்டுத்தான் பதிலளிக்க வேண்டுமென்பதில்லையே. அவரே சங்கத்தின் நடவடிக்கைகளைப் பற்றி விஸ்தாரமாக விவரிக்கத் தொடங்கிவிட்டார்.

''எங்கள் பேட்டையில் ஒரு விசேஷம். மிகப் பெரிய பணக்காரர்களும் இருக்கிறார்கள்; சேரிகளில் வாழும் ஏழைகளும் இருக்கிறார்கள். இந்தச் சேரிகளில் வாழும் ஏழை மக்களின் குழந்தைகளுக்கு இலவசமாகப் பால் வழங்கி வருகிறோம். ஏழைகளுக்கு இலவச வைத்திய வசதியும் அளிக்கிறோம்'' என்று கூறிக்கொண்டு போனார். அவர் கூறிய மொழிகளைச் செவிகள் மடுத்தன. கண்கள் ஏழைக் குழந்தைகளுக்குப் பால் வழங்குவதையும், வரிசையாக ஏழை மக்கள் அமர்ந்து வைத்திய உதவி பெறுவதையும் கண்டு களித்தன. அடுத்துள்ள நர்ஸரிப் பள்ளியிலிருந்து சிறுவர் சிறுமிகளின் மழலை மொழிகளும் காற்றில் மிதந்து வந்தன.

தியாகராய நகரில் பெண்களாகவே நடத்தும் பாங்கியைப் பற்றிப் பத்திரிகைகளில் படித்து ஆண்கள் அதிசயித்தார்கள். இங்கே பெண்களே ஓர் அச்சகத்தை நடத்து

வதைக் கண்டதும், பெண்களாகிய நாங்கள் மனம் வைத்தால் ஆகாத காரியம் இல்லை என்பதைப் புரிந்து கொண்டிருப்பார்கள். பாலை பிடிக்கவேண்டிய கைகள் அங்கே அச்செழுத்துக்களை விரைவாகக் கோத்தன; கோலமிடும் இருக் கைகள் காகிதத்தில் வர்ணமேற்றி மகிழ்ந்தன.

''எங்கள் சீனிவாச காந்தி நிலையத்தின் சிறப்பான அம்சம் இந்த அச்சகம்தான். இங்கே சிறுவர்களுக்கான நோட்டுப் புத்தகங்கள் தயாரிக்கிறோம். கல்யாணக் கடிதங்களும் அச்சடித்துக் கொடுக்கிறோம்!'' என்று கூறி விட்டு, ஸ்ரீமதி வசுமதி அங்கு பணிபுரியும் பெண்களைப் பார்த்து, ''இவர்களில் சிலருக்காகக் கல்யாணக் கடிதாசுகள் நாங்கள் இலவசமாக அச்சடித்த காலமும் உண்டு!'' என்று தம் எழுத்தாளர் அனுபவத்தின்படி ஒரு 'சஸ்பென்ஸ்' முடிச்சுப் போட்டார்.

''என்ன? என்ன?'' என்று திகைப்புடன் வினவினோம்.

''நம் சீனிவாச காந்தி நிலையத்தில் பல ஏழைப் பெண்கள் தங்கள் வாழ்வு நலன் பெற வருகிறார்கள். இவர்கள் பிரச்னைகளை எப்படித் தீர்ப்பது, தொழில் கல்வி மட்டும் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தால் போதுமா என்ற வினா எங்களுக்கு எழுந்தது. இது சம்பந்தமாக நம் காஞ்சி ஆசாரிய சுவாமிகளிடம் விளக்கம் பெற விழைந்தேன். இப்படித் திக்கற்று வரும் ஏழைப் பெண்களுக்குக் கல்யாணம் செய்து வைத்து அவர்கள் நலனைப் பேணுவது நல்லது என்று ஆசாரிய சுவாமிகளும் ஆசி கூறி, தமது தெய்வக் கரத்தால் ஆயிரம் ரூபாய் அதற்கு நன்கொடையும் வழங்கினார்கள். அதன்படி வருஷத்துக்கு நூற்றாறு பேர்களுக்குச் சரியான வரன்களைத் தேடித் திருமணம் செய்து வைக்கிறோம். அப்போது இவர்களுக்கு இங்கு இலவசமாகக் கல்யாணக் கடிதாசு அச்சடித்துக் கொடுக்க வேண்டியதுதானே?'' என்று சிறுகதை பாணியில் விளக்கி வைத்தார் ஸ்ரீமதி வசுமதி.

''உங்கள் அச்சகத்தில் தொழில் கல்வி பெற்றவர்களே தொடர்ந்து பணிபுரிந்தால் மேலும் தொழில் கற்றுக் கொள்ள வருபவர்களுக்கு வாய்ப்பில்லாமல் போகுமே? அப்படியானால் புதிதாக வருபவர்களைச் சேர்த்துக் கொள்ள இயலாதே?'' என்ற சந்தேகத்தை எழுப்பினோம்.

'' உங்களுக்கேற்பட்ட ஐயம் எங்களுக்கும் ஏற்படாமல் போகுமா? எங்கள் அச்சகத்தில் தேர்ந்து பயிற்சி பெற்ற பெண்களுக்கு அச்சகத் தொழிலில் திறமை பெற்றவர்களைக் கொண்டு பரீட்சை வைக்கச் சொல்கிறோம். இதில் தேர்ந்தவர்களுக்கு வெளி அச்சகங்களில் நல்ல வேலையும் வாங்கிக் கொடுக்கிறோம். இங்கிருந்து பயிற்சி பெற்றவர்கள் ஏழெட்டுப் பேர்களுக்கு மேல் வேறு இடங்களில் பணி புரிந்து வருகிறார்கள்'' என்று பெருமையுடன்கூறினார் ஸ்ரீமதி ராமசாமி.

அவ்வை இல்லத்தில் பார்த்தது போலவே இங்கே காகித உறை தயாரிப்



அச்சகத்தின் பெண்மணிகள் பணிபுரிகிறார்கள்

பதில் பல பெண்மணிகள் ஈடுபட்டிருப்பதைக் கண்டோம். மருந்துகள் வைக்கும் உறைகள், தபால் அனுப்பும் பெரிய சிறிய உறைகள், தாம்பூலம் போடும் கவர்கள் வரை பல மாதிரிகளில் லட்சக்கணக்காகத் தயாரித்து அவற்றைப் பல தொழில்களுக்கு விற்பனை செய்து படிப்பற்ற பெண்மணிக்கும் ஊதியம் கிட்ட வாய்ப்புக் கொடுத்திருக்கிறார்கள்.... அதோடு மட்டுமல்ல; பல ஏழைக் குடும்பத்துப் பெண்கள் திருமணத்தினாலோ, போதிய வருவாய் இல்லாமலோ, குடும்பக் கஷ்டத்தினாலோ பாதியில் படிப்பை நிறுத்தி விடுகிறார்கள் அல்லவா? அப்படிப்பட்டவர்களுக்கு அநுபவம் மிக்க ஆசிரியைகளைக் கொண்டு 'தயார் வகுப்பு'க்கள் நடத்தி வருகிறார்கள். ஈ. எஸ். எல். ஸி., எஸ். எஸ். எல். ஸி. ஆகிய பரீட்சைகளுக்கு அவர்களுக்குக் கல்வி புகட்டி, அவற்றில் தேறிய பெண்களை ஆசிரியைப் பயிற்சிக்கோ, கிராம சேவிகைப் பயிற்சிக்கோ செல்லச் சிபாரிசு செய்கின்றனர்.

விலைவாசிகள் ஏறியுள்ள இந்தக் காலத்தில் குடும்பத் தலைவன் ஒருவனைக் 'கோட்' ஸ்டாண்டாகக் கொண்டு தொங்கியிருப்பதை விட இப்படித் தனித்தனியே குடும்பத்துக்குச் சிறு வருவாயானாலும் கொண்டு சேர்க்கப் பெண்மணிகளுக்கு வாய்ப்பளிக்கும் பயிற்சிகளைக் கொண்ட சீனிவாச காந்தி நிலையத்தின் சேவைகளை மறக்க முடியாது. — காமு

சீனிவாச காந்தி நிலையத்தின் மாணவிகள் நடத்தும் வில்லுப்பாட்டு நிகழ்ச்சி



## முப்பத்தைந்தாம் அத்தியாயம்

# கண்ணகியும் கயல்விழியும்

பழமுதிர் சோலையாம் அழகாபுரியிலிருந்து மதுரைத் தலைநகரத்துக்கு வந்து சேர்ந்த குலசேகர பாண்டியர், மதுரை மாநகரமே குமுறிக் கொண்டிருப்பதைக் கண்டார். எந்தப் புலவனை வரவேற்றுப் பெருமை பெற வேண்டுமென்று நகர மாந்தரின் ஐம்




பெரும் பிரிவினரான அறவோர், ஆளுங் கணத்தோர், வணிகர், தொழிலாளர், உழவர் ஆகியோர் விரும்பினரோ, அவன் அதே நகரில் சிறை வைக்கப் பெற்றிருந்தான். பாண்டிய நாட்டுக்கே இது இழுக்கு என்று கூறி, நகரத்துப் பெருமக்கள் அரசரிடம் வந்து முறையிட்டுச் சென்றனர்.

அமைச்சர் சயங் கொண்ட வல்லபரோ புலவன் மேலுள்ள குற்றச்சாட்டுக்களை ஓலையில் எழுதிப் பாண்டியரிடம் கொடுத்திருந்தார். அரசர் நகரத்துப் பெருமக்கள் கூறியதையும் ஆராய்ந்தார்; அமைச்சர் தனித்துக் கூறியதையும் ஆராய்ந்தார். ஓலையில் இருந்த குற்றச்சாட்டுக்களையும் கவனித்தார்.

பொதுச் சபை கூடி, குற்றம் சாட்டப்பட்ட புலவனை விசாரணை செய்து நீதி வழங்க வேண்டிய பெருங் கடமை பாண்டியரின் முன்னே நின்றது. நாள் குறிப்பிட்டுப் பொதுச் சபை கூடுவதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கச் செய்தார் பாண்டியர்.

நாள் குறித்தாகி விட்டது. விழுப்பரையர் பல்வேறு பணிகளில் ஈடு

பட்டிருந்ததால், கயல்விழியிடம் அமைதியாகப் பேச அவருக்கு நேரம் கிடைக்கவில்லை. கயல்விழிக்கு மட்டிலுமே இது பயங்கரமான சோதனையாக அமைந்துவிட்டது.

பைந்தமிழ்க் குமரன் சோழ சாம்ராஜ்யத்தின் ஆணைகளைத் துச்சமாக மதிப்பவன். அமைச்சரின் செருக்கைப் பொருட்படுத்தாதவன். ஆனால் பாண்டியரே அவனுக்குத் தண்டனை அளித்தால் என்ன செய்வது? எந்தப் பாண்டியருக்காகவும், அவருடைய நாட்டுக்காகவும் ஒருவன் தன்னையே தியாகம் செய்து கொண்டிருக்கிறானோ, அவரே அவனை நாடு கடத்தினால் என்ன செய்வது? சோழ சாம்ராஜ்யத்தின் சிற்றரசான பாண்டியரின் நீதி, சிற்றரசரின் நீதியாகத்தானே இருக்கும்? அவர் எங்ஙனம் சாம்ராஜ்யத்துக் கட்டளைக்கு எதிராக அவனுக்கு விடுதலை அளிப்பார்?

வெண்ணெய் திரண்டு வரும் வேளையில் தாழி உடைவது போல் தோன்றியது கயல்விழிக்கு. ஏலமலைக் காட்டிலும், காஞ்சியிலும், திருமுனைப்பாடி நாட்டிலும் ஏதேதோ சாகஸங்கள் செய்து வந்தவன் இப்போது பாண்டியருக்குப் பணிந்து விடப் போகிறான். தண்டனையை ஏற்றுக் கொண்டு அவர் பாதங்களில் தண்டனிடப் போகிறான்.

சபை கூடும் நாள்:

அதிகாலையில் எழுந்து போய்க் கயல்விழி வைகையில் நீராடினாள். நேரே கண்ணகியின் கோயிலை நாடி நடந்தாள். அரச மரங்களால் சூழப் பெற்ற அந்தச் சிறு கோயிலில் அப்போது கண்ணகியின் படிவத்துக்கு முன்பு ஓர் அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. தன் கணவனுக்காக அரச

# அகிலன்

நீதி கோரிய கண்ணகி, அங்கே தன் ஒற்றைச்சிலம்பும் கையுமாக வீற்றிருந்தாள். பாண்டியனிடம் முறையிட்டு நீதியை நிலை நாட்டிய பத்தினித்தெய்வம் அவள்.

''தாயே!'' என்று நாத் தழுதழுக்க விம்மினாள் கயல்விழி. ''நீ அன்றைக்குப்

---

* மதுரையில் செல்லம்மன் கோயிலாக உள்ள கொற்றவைக் கோயிலில் இன்றும் பத்தினித் தெய்வமாம் கண்ணகியின் வண்ணச் சிலை இருக்கிறது. பாண்டியனிடம் பரல் சிதறக் காட்டிய ஒற்றைச் சிலம்பு போக, எஞ்சிய ஒரு கால் சிலம்பைத் தனது இடது கரத்தில் பற்றியவண்ணம் அமர்ந்திருக்கும் திருக்கோலம் அது. நிமையைத் தமது வெஞ்சினத் தீயால் அழித்த பின்னர் அமைதி நாடி அமர்ந்துள்ள படிவம். தலை முடி, கண் மலர்கள் போன்ற ஆபரணங்கள் சூட்டி அதை இன்று கொற்றவைத் தேவியாக வழிபடுகின்றார்களென்றாலும், அது மனிதப் பெண்ணுக்குரிய அங்கலட்சணங்களுள்ள கண்ணகி சிலையே என்பதில் ஐயமில்லை.

பாண்டியர் நெடுஞ்செழியனிடம் சென்று முறையிடுவதற்குள் நீதி செத்துப் போய் விட்டது. உன் கணவர் அதற்குள் கொல்லப்பட்டு விட்டார். ஆனால் அந்த நிலை எனக்கு இன்னும் வரவில்லை. எனக்கு என் கணவரைக் கொடு! ஆம், அவர் என் கணவர்தாம். அவரை எனக்குக் கொடு!''

கண்ணகியின் வலது கரத்திலிருந்தது செங்கோல் போல் தோன்றியது கயல்விழிக்கு. அந்தப் பத்தினியின் முகத்தில் குடி கொண்டிருந்த தூய அமைதியைக் கண்ணுற்றாள். மீண்டும் கயல்விழி கதறினாள்.

''பத்தினித் தெய்வமே! உனக்கு மட்டுமே என்னுடைய துன்பங்கள் முழுவதும் தெரியும். நான் யார் என்பதும், என் வாழ்வின் மறக்க முடியாத துயரம் எது என்பதும், உனக்கு மட்டுமே தெரியும். அவருக்குக் கூடத் தெரியாத இரகசியம் அது. அதுவே என் குற்றமாக இருந்தால், அந்தக் குற்றத்துக்காக அவரைத் தண்டித்து விடாதே. அவரை எப்படியாவது காப்பாற்று; அவருக்கு இன்று நீதி கிடைக்காவிட்டால், நான் உன்னடியில் வந்து உயிரை மாய்த்துக் கொள்வேன். நான் பத்தினியல்ல என்று நீ நினைத்தால், எனக்கு அதுவே தண்டனையாக இருக்கட்டும்!''

மலர் தூவி, மண்டியிட்டு, கண்ணகியிடம் தன் உள்ளக் குமுறல்களையெல்லாம் கொட்டிவிட்டு வெளியில் வந்தாள் கயல்விழி. நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கையை அவள் இழந்து விடத் துணியவில்லை.

அரசவை மண்டபத்துக்குள் கயல்விழியும், அவள் குழுவைச் சார்ந்தவர்களும் அநுமதி பெற்று நுழைந்தார்கள். அதற்குள் மண்டபம் முழுவதுமே பெருமக்களால் நிறைந்திருந்தது. குலசேகர பாண்டியரின் சிம்மாசனத்துக்கு முன்னால் இடது புறத்தில் செருக்கோடு அமைச்சர் சோழ வல்லபர் அமர்ந்திருந்தார். வலது புறத்தில் விழுப்பரையர் ஆழ்ந்த யோசனையில் மூழ்கியிருந்தார். பாண்டியரின் வரவு அறிவிக்கப் பட்டது. அனைவரும் எழுந்து நின்றனர்.

குலசேகர பாண்டியர் களையிழந்த முகத்தோடும் கவலைகள் சூழ்ந்த விழிகளோடும் வந்து தமது ஆசனத்தில் அமர்ந்தார். நீதி வழங்கும் பணியின் தூய்மையை உணர்ந்தவர் அவர். நடுநிலையோடு ஆராய்ந்து நீதி வழங்கும் பழக்கமுள்ளவர். ஆனால் அன்று மட்டும் அவர் முகம் ஏதோ ஒரு விரும்பத்தகாத பணியைச் சூழ்நிலையின் வற்புறுத்தலால் ஏற்றுக் கொண்டிருப்பதை வெளிப்படையாகவே காட்டியது.

புலவனைச் சபைக்கு அழைத்து வந்தார்கள். கரங்களில் விலங்கோடு அவன் கொண்டு வரப்பட்ட காட்சி சபையோரின் கண்களை உறுத்தியது போலவே பாண்டியரின் கண்களையும் உறுத்தியிருக்க வேண்டும்.

''விலங்கை அகற்றுங்கள்!'' என்று கோபத்தோடு கட்டளையிட்டார் பாண்டியர். அந்தக் குரல் அமைச்சரை என்னவோ செய்தது.

''ஒரு முறை தப்பி ஓடிய குற்றவாளி. அதனால்...''

''இது பாண்டிய நாடு. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த நாடு. வள்ளுவரை அரங்கேற்றிய மதுரைமா நகரம் இது. குற்றம் சாட்டப்பட்டிருப்பவர் ஒரு புலவர்'' என்று மிடுக்கோடு கூறினார் பாண்டியர்.

பைந்தமிழ்க் குமரனின் விலங்கு அகற்றப் பெற்றது. மெல்லத் தலை தூக்கி ஒரே ஒரு கணம் பாண்டியரைப் பார்த்து விட்டு உடனே தலையைக் கவிழ்த்துக் கொண்டான். மீண்டும் நோக்கினால் அவனால் தன் கண்ணீரை அடக்க முடியாது போல் தோன்றியது. எவ்வளவு மாற்றம் பாண்டியரிடத்தில்! உருக்குலைந்து, உடல் நலிந்து, முதுமைப் பருவத்தால் மெலிந்தவர் போலல்லவோ தளர்வெய்தி விட்டார்! புலவனின் இரத்தம் துடித்தது! ஒரே இரத்தமல்லவா?

பாண்டியரும் அவனை ஏறிட்டுப் பார்த்தார். கூர்ந்து நோக்கினார். எப்போதோ எங்கேயோ கண்டிருப்பது போன்ற பிரமை அவருக்கு. எப்போது எங்கென்று விளங்கவில்லை. அவர் இதயம் ஏனோ வேதனைப்பட்டது. அவனைப் பார்த்த மாத்திரத்தில்.

''இந்தப் புலவரின் மீதுள்ள குற்றச்சாட்டு?'' என்று அமைச்சரை வினவினார் அரசர்.

''பாண்டிய நாட்டுக்குப் பெருமை தருவதற்காக இந்தப் புலவர் சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகருக்கு அழைக்கப் பெற்றார். இவரை அழைத்த குலோத்துங்க சக்கரவர்த்திகள் எத்தனையோ புலவர்களை ஆதரித்துப் புகழ் பெற்றவர்கள்; பரிசில்களும் பாதுகாப்பும் அளித்துத் தமிழ் வளர்த்தவர்கள். அந்த வள்ளலையே இவர் அலட்சியப்படுத்தி, இவருக்கும் பாண்டிய நாட்டுக்கும் இழுக்குத் தேடியிருக்கிறார். — இது முதல் குற்றம்.

"அதையும் பொருட்படுத்தாது, இவரை விருந்தினர் மாளிகையில் வைத்து அவர்கள் கௌரவித்திருக்கிறார்கள். இவரோ ஒரு காவலாளியை நையப் புடைத்து விட்டு, மாளிகையின் சாளரத்துக் கம்பியை வளைத்துக் கொண்டு, அங்கிருந்து யாரும் அறியாமல் தப்பி ஓடி யிருக்கிறார் — இது இரண்டாவது குற்றம்.

"இவர் சோழ நாட்டுக்கு எதிராகப் பாண்டிய மக்களிடம் வெறுப்பூட்டும் வகையில் இந்த மதுரை மாநகரிலேயே உரையாற்றியிருக்கிறார். இதனால் இந்த நாட்டின் மீது மற்றொரு படையெடுப்பு நிகழும் அபாயத்தை இவர் தோற்றுவித்திருக்கிறார். நாடு இன்னும் சென்ற போரின் துன்பத்திலிருந்து மீளவில்லை. இவருடைய இந்தச் செய்கை பாண்டிய நாட்டுக்கே துரோகம் செய்வதாகும். — இது மூன்றாவது குற்றமாகும்."

பாண்டியருக்கு அச்சம் விளைவித்தது அமைச்சரின் மூன்றாவது குற்றச்சாட்டுத்தான்; மற்றொரு போரை நடத்தப் போவதாக அமைச்சரே பறையறைவித்து விட்டார்!

"புலவரே! உங்களுடைய மறுமொழி?" என்றார் பாண்டியர்.

மறுமொழி கூறுவதற்குரிய பல செய்திகள் அவனிடமிருந்தன. ஆனால் ஏனோ அவன் அப்போது திடீரென்று கோழையாகி விட்டான். சொற்கள் நெஞ்சிலிருந்தன. தொண்டை அடைத்துக்கொண்டு விட்டது. விழுப்பரையர் அவனது மறுமொழிக்காகத் துடித்தார். மன்னரும், மற்றோரும், கயல்விழியும் ஒன்றாகத் துடித்தார்கள்.

புலவனின் நாத் தழுதழுத்தது. "நான் .... நான் .... ஏதும் கூற விரும்பவில்லை. ஆனால் இந்த நாட்டுக்கும் மக்களுக்கும் நான் கனவிலும் துரோகம் நினைக்காதவன்" என்று கூறி முடித்து விட்டான் அவன்.

பிறகு அவன் பேசவில்லை. கூட்டம் திடுக்கிட்டு நின்றது. பாண்டியர் தவித்தார். விளக்கமான மறுமொழி கூறவில்லையென்றால் அமைச்சரின் குற்றச் சாட்டுக்கள்தானே மெய்யாகும்?

சபையில் பரபரப்பு ஏற்பட்டது. கயல்விழி வெறி கொண்டவள் போல் சபை நடுவே ஓடி வந்து நின்றாள்.

## முப்பத்தாறும் அத்தியாயம்

# முறையிட்டாள் நங்கை

குலசேகர பாண்டியருக்குச் சபை நடுவில் கயல்விழியைக் கண்டவுடன் ஏனோ கண்ணகியின் நினைவுதான் முதலில் வந்தது. பாண்டியன் நெடுஞ்செழியன் செய்த பெரும் பிழையும் அதன் பின் விளைவுகளும் அவரிடம் மின்னலெனப் பளிச்சிட்டன.

"கயல்விழி! கயல்விழி!" என்று சபையிலிருந்த பெருமக்களில் பலர் வாய் விட்டுக் கூவினார்கள். அவளுடைய கூத்தான 'வெற்றித் திருமகளை'க் காணும் வாய்ப்பைப் பெற்றவர்கள் அவர்கள். அவளுடைய தோற்றம் வெறும் மானிடப் பெண்ணின் தோற்றமாக அவர்களுக்குப் படவில்லை. கொற்றவைத் தேவியே அங்கு வந்திருந்தாள்.

"யார் நீ?" என்று கேட்டார் பாண்டியர்.

"கயல்விழி; புலவர் எங்கள் தலைவர்" என்றாள் அவள். "அவருடைய பணிப் பெண் என்ற முறையில், அவர் சார்பில் அமைச்சர் அவர்களது குற்றச் சாட்டுக்குப் பதில் அளிக்க வந்திருக்கிறேன். உண்மையைக் கூறி நீதிக்கு முறையிட வந்திருக்கிறேன்."

அமைச்சர் குறுக்கிட்டார்: "புலவரே முறையிடுவதற்கு ஏதுமில்லையென்று கூறிய பிறகு, அவருடைய பணிப் பெண் எதற்காக இங்கு முன் வரவேண்டும்? புலவருக்கும் இல்லாத புலமை உன்னிடம் இருக்கிறதென்று சபையில் வெளிப்படுத்துவதற்காகவா?"

"அமைச்சர் அவர்கள் தயைசெய்து நான் கூறும் உண்மைகளை இரக்கத்தோடு சிந்தித்தருள வேண்டும்" என்றாள் கயல்விழி. பிறகு பாண்டியர் பக்கம் திரும்பினாள். அவர் முகத்தை நேருக்கு நேர் ஏறிட்டுப் பார்த்தாள். கூறத் தொடங்கினாள்:

"அறத்தையே சொல்லின் வடிவத்தில் இறைவனாக வழிபடுகிறவர்கள் புலவர்கள். அதனால்தான் இந்த நாடு அரசர்களையும் அமைச்சர்களையும் அறவோரை விட உயர்ந்தோராகப் போற்றி வந்திருக்கிறது. அரசர்களுக்குச் செங்கோலாக விளங்குபவர்கள் அறவோர். சத்தியத்தை விட வேறெதற்கும் கட்டுப்படாது, வேறெதற்குமே ஆசைப்படாது, ஒரு பற்றற்ற கூட்டம் இந்த நாட்டில் உலவி வருமானால் அது அறவோர் கூட்டம்தான். வள்ளுவர்

நேரடியாக அறம் பாடினார்; கம்பர் கதை சொல்லிக் காப்பியத்துக்குள் அறத்தைத் தேனைக் குழைத்துக் கொடுத்தார். இளங்கோவடிகளும் அரசைத் துறந்து, காப்பியம் பாடி, 'அரசியல் பிழைத்தார்க்கு அறமே கூற்றாகும்!' என்று அஞ்சாது முழங்கினார்!....''

பைந்தமிழ்க் குமரனுக்கு மெய் சிலிர்த்தது. கயல்விழியிடம் ஓய்வு நேரங்களில் அவன் பேசிய பேச்சுகளெல்லாம் எவ்வளவு ஆழமாக அவள் உள்ளத்தில் பதிந்திருக்கின்றன!

''அறவோரும் மெய்யான புலவரும் என்றுமே தங்களைப் பாதுகாத்துக்கொள்ள முனைந்ததில்லை. அவர்களை அரசர்களும், வள்ளல்களும், குடிமக்களும் பாதுகாத்தார்கள். நடமாடும் தெய்வங்களாக அவர்களைப் போற்றினார்கள். அவர்களைப் போற்றுவதால், அவர்கள் அறச் சொல் கேட்டு நடப்பதால், தங்கள் வாழ்வு சிறக்கும் என்பதால் அவர்களைப் பலரும் பேணுகிறார்கள். இங்கேயோ போற்ற வேண்டிய அரசு ஒரு புலவரைக் குற்றவாளியாக நிறுத்தியுள்ளது! புலவர் தம்மை மறந்தவர். அவரைக் காத்துக்கொள்ளாததால் அவர் இழந்துவிடப் போவது ஒன்றுமில்லை. 'நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்!' என்ற பரம்பரையில் வந்தவரா அமைச்சர் அவர்களின் புனைந்துரைகளைக் குற்றச்சாட்டுக்கள் என்று மதிக்கப்போகிறார்?''

அமைச்சரின் விழிகள் கோவைக் கனிகளாக மாறின. அவர் குறுக்கிடத் துடித்தார். கயல்விழி தொடர்ந்து பேசினாள்:

''புலவர் இந்த நாட்டின் பொதுச் செல்வம். பாண்டிய அரசுக்கே அது நிலைத்திருக்க வேண்டுமானால், அவர் சார்பில் முறையிடும் கடமை இருக்கிறது. இந்த நாட்டுக் குடிமகன்—குடிமகள் ஒவ்வொருவருக்காகவும் வாழும் புலவர் இவர். சபையில் இருக்கும் ஒவ்வொருவருக்கும் அவரைக் காக்கும் கடமை உண்டு. குடிமக்கள் தங்களைக் காத்துக் கொள்வதற்காகவே இந்த இளம் புலவருக்கு நீதி கோரி முறையிட வேண்டும். அந்த முறையில், இந்த நாட்டின் குடிமகள் என்ற முறையில் நான் வந்துள்ளேன். மேலும் புலவர் அரசுக்குக் கூற வேண்டிய உண்மைகளையும் நான் ஓரளவு அறிந்தவள். நான் அவருடைய பணிப் பெண்.''




''நான் முழுசா ஐந்து ரூபாய் நோட்டைக் கையில் வாங்கிப் பார்த்ததில்லேங்க!''

''சும்மா அளக்காதீங்க! ஐந்து ரூபாயைக்கூடப் பார்த்ததில்லேயா?''

''அட! அதைப் பார்ப்பதற்கு எங்கேங்க நேரமிருக்கு? அதுக்குள்ளேதான் அது செலவழிந்து விடுகிறதே!''

அரசர் சிலையானார். சபையில் ஊசி விழுந்தாலும் ஓசை எழும் அளவுக்கு மௌனம் நிலவியது. விழுப்பரையரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் அருவியாகப் பெருக்கெடுத்தது. அமைச்சர் முள்ளின் மேல் அமர்ந்தவர் போல் வேதனைப்பட்டார்.

பைந்தமிழ்க் குமரனின் கண்களுக்கு அப்போது அவள் கயல்விழி இல்லை. அவனுடைய கரத்தாலும் தீண்ட முடியாத கொற்றவைத் தேவி அவள்.

''கயல்விழி! அமைச்சர் கூறிய மூன்று குற்றச்சாட்டுகளுக்கும் நீ மறுமொழி கூறலாம்'' என்று அமைதியோடு ஆணையிட்டார் அரசர்.

''குலோத்துங்க சோழச் சக்கரவர்த்திகளைச் சிறுமைப்படுத்தி, அதனால் இரு நாடுகளுக்கும் இழிவு தேடிவிட்டார் என்பது முதல் குற்றச்சாட்டு. எங்கள் தலைவர் தாமாகச் சோழ நாட்டுக்குச் சென்று சோழரின் புகழ் பாடிப் பரிசில் பெற விரும்பினாரில்லை. சோழர் வற்புறுத்தியதின் பேரிலேயே பாண்டிய நாட்டில் அவர் பாடிய கூத்துப் பாடலையே பாடியிருக்கிறார். மக்களை வாழ வைப்பதற்காகப் பாடிய பாடல் அது. அதைக் கேட்டவர்களும் அதைக் கூத்தாக இங்கு கண்டவர்களும் இந்தச் சபையில் நிறைந்திருக்கிறார்கள். மேலும் இவர் சோழ நாட்டுக்கு அழைக்கப்பட்டது சக்கரவர்த்திகளால்; புலவரை இங்கிருந்து அனுப்பி வைத்தவர்கள் தாங்கள்! குற்றச்சாட்டென்றால் அதற்கு உரியவர்கள் சக்கரவர்த்திகளும் பாண்டியருமே!''

சபையில் சூறாவளி வீசியது. பாண்டியரின் முகத்தில் அதிர்ச்சியில்லை; அமைதி நிலவியது.

"இரண்டாவது குற்றச்சாட்டு புலவர் விருந்தினர் மாளிகையிலிருந்து தப்பிச் சென்றது: புலவரைச் சிறை விடும்படி சக்கரவர்த்திகள் கட்டளையிடவில்லை. அதற்குச் சான்றாக நம்மிடம் பெரும் புலவர் விழுப்பரையர் இருக்கிறார்கள்; சக்கரவர்த்திகளிடம் தூது சென்றவர்கள் இவர்கள். இளவரசரின் சொந்த விருப்பத்துக்கு அவர் ஒரு பாண்டிய நாட்டுக் குயிலைக் கூண்டிலடைத்து வேடிக்கை பார்க்கத் துணிந்தாரென்றால், கூண்டும் குயில் வேடிக்கைப் பொருளாகக் கட்டுப்பட்டிருக்க வேண்டுமென்பதில்லை. கம்பரே அவர்கள் நாட்டை விட்டு வெளியேறியிருக்கிறார். ஆகவே, புலவர் செய்தது இயற்கை. அவரது அருமை அறியாமல் அவரைக் கூண்டிலடைத்த குற்றம் இளவரசருடையது!"

"சோழ சாம்ராஜ்யத்தின் இன்றைய சக்கரவர்த்திகளை நீ குற்றம் சாட்டுகிறாய்!" என்று இடிக் குரலில் முழங்கினார் அமைச்சர்.

"'இறைவன் செய்தாலும் குற்றம் குற்றமே!' என்று முழங்கிய நக்கீரர் வாழ்ந்த நகரம் இது" என்று பதிலளித்தாள் கயல்விழி. பெருமக்கள் தங்களை மறந்து ஆனந்த ஆரவாரம் செய்தார்கள்.

"கடைசிக் குற்றச்சாட்டு, இவர் குடிமக்களிடம் விழிப்பேற்படுத்தி வருகிறார் என்பது. இதுவே அறவோரும் புலவரும் செய்யும் மிக உயர்ந்த தொண்டு என்பதைப் பாண்டியர் அறிந்திருப்பார்கள். மனிதர்கள் விலங்குகளல்லர் அவர்களை என்றென்றும் கொடுங்கோன்மையால் அடக்கி ஒடுக்கி வைத்து, எந்தச் சாம்ராஜ்யத்தையும் நிலைக்கச் செய்துவிட முடியாது. அரச போகத்தையே தமது இலக்கியப் பணிக்காகத் துறந்து வந்த இளங்கோவடிகள் புலவர்களுக்கோர் எடுத்துக்காட்டு. அறத்தின் வழி செல்லாத அரசை அழிக்கும் திறன் கூர் வாளிடமில்லை. அறத்தின் வழி பிறக்கும் சொல்லிடம் உள்ளது. ஆகவே, இந்த நாட்டைக் கொலையாலும், கொள்ளையாலும், கொடுமையாலும் கைப்பற்றியுள்ள சாம்ராஜ்யம் சரிய வேண்டிய சாம்ராஜ்யமே! குற்றவாளி கங்காபுரியில் வாழ்கிறார்!"

பாண்டியர் பதறிப் போய்விட்டார். தீக்கனலைப் போன்ற பேருண்மைகள், அவர் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்த உண்மைகள், கயல்விழியின் உருவம் பெற்று அங்கே பற்றி எரியத் தொடங்கி விட்டது.

சரேலென்று வாளை உருவிக்கொண்டு கயல்விழியின் மீது பாய்ந்தார் சயங்கொண்ட சோழ வல்லபர். "சொல் முனையின் வலிமையைக் காணப் போகிறேன் நான்!" என்று கூறிக்கொண்டே தாவி வந்தார்.

"சொல் முனைப் புலவனுக்குச் சிறிது வாள் முனைப் பயிற்சியும் உண்டு!" என்று கூறி அடுத்து நின்ற புலவன் ஒருவனின் வாளை உருவிக் கொண்டு குறுக்கே வந்தான் பைந்தமிழ்க் குமரன். "ஆனால் சொல்லுக்கு அடங்கியதுதான் இந்த நாட்டு வாள் முனை!"

வாளும் வாளும் மோதித் தீப்பொறி உதிர்த்தன. யாவுமே புயல் வேகத்தில் நடந்தமையால் பாண்டியர் எதுவுமே செய்வதறியாது திகைத்துப் போனார். (தொடரும்)

### குட்டிக் கதை

ஹாலிவுட் பாடக-நடிகர்களில் புகழ் வாய்ந்தவர் எல்விஸ் பிரெஸ்லி. அவர் விசிறிகள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்தனர். இந்த விசிறிகளுக்கு எதைக் கேட்பது, எதைக் கேட்கக் கூடாது என்று எங்கே தெரிந்திருக்கிறது? தங்கள் அபிமான நடிகர் என்றால் எதையும் கேட்கலாம் என்ற ஆசையே தோன்றுகிறது. எத்தனையோ பேர் அவர் புகைப்படத்தைக் கேட்டு எழுதினர். அதோடு அவர் தலைமயிரில் ஒன்று வேண்டும் என்று விசித்திர ஆசையையும் தெரிவித்தனர்.

ஒரு நாள் ஒரு பட முதலாளி எல்விஸின் வீட்டுக்கு வந்தார். அவர் மேஜையின் மீது போர் போலக் குவிந்திருந்த தபால் உறைகளைக் கண்டார். எல்லாம் தபாலில் சேர்க்கப்பட வேண்டியவை என்பதையும் அறிந்தார். 'எல்விஸ் வீட்டில் ஏதோ விசேஷம் போலிருக்கிறது! நமக்கும் அழைப்பு வராதா?' என்று எண்ணினார். இருந்தாலும் எல்விஸ் அவரைப் பார்க்க ஹாலுக்கு வந்ததும், ஆவலை அடக்க முடியாமல், "இந்த உறைகளுக்குள் என்ன இருக்கிறது?" என்று கேட்டார்.

"என் விசிறிகளின் கடிதங்களுக்குப் பதிலும் அவர்கள் ஆசையை நிறைவேற்றத் தலைக் கேசங்களில் ஒன்றும் இருக்கின்றன!" என்று சுருக்கமாகப் பதிலளித்தார் எல்விஸ்.

"இப்படித் தலைக் கேசங்களை அன்றாடம் நீங்கள் அனுப்புவதென்றால், அப்புறம் உங்கள் தலை என்ன ஆவது? மொட்டையாக வேண்டியதுதானே?!" என்றார் பட முதலாளி.

"ஒரு திருத்தம். என் தலை மொட்டையாகாது." சிரித்துக் கொண்டே எல்விஸ் தமது பக்கத்திலிருந்த நாயைச் சுட்டிக் காட்டினார். தொடர்ந்து, "இது கட்டாயம் மொட்டையாகி விடும்" என்று கூறியவர், "பாவம், வாயில்லாப் பிராணி! நன்றியுள்ள பிராணி" என்று முடித்தார்.

-15-

கதை:
தம்பு

சித்திரம்
செல்லம்
















அவளுக்கு அது சுட வில்லை போலிருக்கிறதே?
ஹும்! இந்த நிலைமையில் உடல் உணர்ச்சியே இராது. மனம் வேறு எதிலாவது ஆழ்ந் திருக்கும்.


வள் இனிமேல் ாங்கப் போய்விடுவாள். ாம் போகலாம்!
சரி! ஆனால், இவள் மீது ஒரு கண் வைத்திருக்க வேண்டும்.












என்ன செய்வேன்? இப்படிப் பேசுகிறீர்களே? தங்கள் மனம் ரொம்பவும் பேதலித்திருக்கிறது. என்னைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சத்தியம் செய்து கொடுத்தீர்களே? மறந்து விட்டீர்களா?

நான் ராஜா! நீ என் காதலி! ஆகையால் நீ ராஜாத்தி. பேஷ், பேஷ்! நானும் ஒரு நர்ஸ் ஆகி விடுகிறேன்! ஜோடியா யிருக்கும்! ஆண் நர்ஸ். ஆ ஹா ஹா!

தொடரும்

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம்

---

ஹார்வி

# ரூவின் டஸ்கர்

டிரில்



மதுரை மில்ஸ்
கம்பெனி லிட்., தயாரிப்பு
உயர்ந்த ரக நூல்களுக்கு
பிரக்யாதி பெற்றது.



மதுரையைச் சேர்ந்த ஹார்வீஸ்

B3-MMC-16 TM

---

குணத்தில் சிறந்தவை

# ஸ்வஸ்திக் வேதாரணியம் புகையிலை

ஸ்பெஷல் தயாரிப்பு

15 ந. பை.

பிளாஸ்டிக் பொட்டலங்கள்




கர்நாடக இசையில் கானடா ராகம் செவிக்கு இதமானது; குளுமையானது. அதேபோல் கடல் கடந்த நாடுகளில் கானடா தேசம் வாழ்க்கைக்கு இதமானது; குளுமையானது.

ஜன சந்தடியையும் தொழில் பரபரப்பையும் குறிப்பிட்ட ஒருசில நகரங்களில் ஒதுக்கி விட்டு நாடு பெரும்பாலும் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பதால் வாழ்க்கை இதமாக இருக்கிறது. அமைதி நிறைந்திருக்கிறது. தேவைக்கு மேல் பன்மடங்கு உற்பத்தி அங்கே !

பூகோள ரீதியில் வடதுருவத்தை ஒட்டியுள்ள பிரதேசமாக இருப்பதால் குளுமையும் அதிகமாகத்தானே இருக்க முடியும்?

சென்னை புதுக் கல்லூரி உயிரியல் பேராசிரியர் ஜனாப் முகமத் மொஹிதீன், தம் உயிரியல் சாஸ்திர ஆராய்ச்சிக்காகக் கானடா நாட்டில் இரண்டு ஆண்டுகளுக்கு மேலாகத் தங்கியிருந்து விட்டுச் சமீபத்தில்தான் திரும்பி வந்தவராகையால் அவர் நினைவில் அந்த நாட்டுக் காட்சிகள் பசுமையாக இருக்கின்றன. அவருடன் சிலமணி நேரங்கள் பேசிக் கொண்டிருந்த போது அந்த நாட்டு மக்களைப் பற்றியும், குறிப்பாக மாணவர்கள் சமூகம் பற்றியும் வாழ்க்கைத்தரம் பற்றியும் நன்கு தெரிந்து கொள்ள முடிந்தது.

பழங்காலப் பாகப் பிரிவினைகளின் காரணமாக, மூதாதையர்கள் கட்டி எழுப்பிய பெரிய வீட்டில் நட்டநடுவில் குறுக்குச் சுவர் எழுப்பி அண்ணன் தம்பிகள் இரு பக்கத்திலும் வசிக்கும் கதையைத்தான், ஐக்கிய அமெரிக்க நாடும் கானடா தேசமும் பிரிக்கப்பட்டிருக்கும் விதம் நினைவூட்டுகிறது. ஆனால் இந்தப் பிரிவினை எந்தவிதமான அபிப்பிராய பேதங்களின் விளைவாகவும் எழுந்ததில்லை. அடிக்கோலை வைத்து நீண்ட கோடு போடுவது போல் பூகோள ரேகை அடிப்படையில், இரு நாடுகளும் அபிப்பிராய ஒற்றுமையில் அமைத்துக் கொண்டது தான் இந்த மூவாயிரத்து ஐந்நூறு மைல் நீளமுள்ள எல்லைக்கோடு.

உலகப் பிரசித்தி பெற்ற நயாகரா நீர் வீழ்ச்சியின் ஊடே இந்த எல்லைக்கோடு செல்வதால் அந்தப் பிரும்மாண்ட நீர்வீழ்ச்சியின் ஒரு பகுதி கானடா நாட்டிலும் ஒரு பகுதி அமெரிக்கப் பிராந்தியத்திலும் இருக்கின்றன.

மாண்ட்ரீல் நகர விமான தளம் உலகத்தின் பல இடங்களையும் விமானப் போக்குவரத்தின் மூலம் இணைக்கிறது. வெளிநாடுகளிலிருந்து இந்த நாட்டுக்கு வருபவர்கள் இங்கு தான் வந்து இறங்க வேண்டும். ஏற்கனவே பாரிஸ் நகரம் சென்று பார்த்திருப்பவர்களுக்குத் தாங்கள் மீண்டும் பாரிஸுக்கே வந்திருக்கிறோமோ என்று பிரமை ஏற்பட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. காரணம் உலகத்திலேயே பாரிஸுக்கு அடுத்தபடியாக ஃப்ரெஞ்ச் மொழி உபயோகத்திலிருக்கும் நகரம் மாண்ட்ரீல்தான். இந்த இடத்தை 1535ம் ஆண்டில் கண்டுபிடித்தவரே ஜேக்விஸ் கார்ட்டியர் என்னும் பிரெஞ்சுக்காரர்தான்.

ஒரு சிறு தீவு போல் அமைந்துள்ள இந்த நகரம் உலகத்தில் பிரசித்தமான துறைமுகங்களில் ஒன்று. இந்த இடத்தைப் பிரதான நிலப் பரப்புடன் பத்து மோட்டார் போக்குவரத்துப் பாலங்களும் ஐந்து ரயில் பாலங்களும் இணைக்கின்றன. அவைகளில் ஜேக்விஸ் கார்ட்டியர் பெயராலேயே 1930ம் ஆண்டில் எழுப்பப்பட்டிருக்கும் 8670 அடி நீளமுள்ள போக்குவரத்துப் பாலம் பார்க்க வெகு ரம்மியமாக இருக்கிறதாம்.

இதர தொழில்கள் போல் கல்வித் தொழிலுக்கும் இந்த நகரில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. பல சர்வகலாசாலைகள் நிறம்

பட இயங்குகின்றன. வெளிநாடுகள் பலவற்றிலிருந்து மேற்படிப்பு வேண்டிய மாணவர்கள் இங்கு வந்து தங்கிப் படிக்கிறார்கள்.

இங்குள்ள சர்வகலாசாலைகளிலும் மாணவர்கள் அவ்வப்போது 'ஸ்டிரைக்கில்' ஈடுபடுவது உண்டாம். ஆனால் அது மிகவும் கட்டுப்பாடாகவும் கண்ணியமான முறையிலுமிருக்கும். முதலாவது எந்தச் சூழ்நிலையிலும் போலீஸார் குறுக்கிட வேண்டிய அவசியமில்லாமல் பார்த்துக் கொள்வார்கள். இரண்டாவது சர்வகலாசாலைகளில் நடக்கும் ஆராய்ச்சி வேலைகள் தடைபெறாமலும் கவனித்துக் கொள்கிறார்கள்.

ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டிருக்கும் மாணவர்களுக்கு 'ஸ்டிரைக்' ஏற்பாடு செய்யும் மாணவர் தலைவர்களே அனுமதிச் சீட்டு வழங்கி அவர்களை உள்ளே அனுப்புகிறார்கள்.

சர்வகலாசாலைகளில் நடக்கும் ஆராய்ச்சித் துறை சம்பந்தமாக வேறு பல சுவாரசியமான தகவல்களும் தெரிய வந்தன.

சர்வகலாசாலைகள் கல்வித் துறையின் கீழ் இயங்கிய போதிலும், அவைகளில் உள்ள ஆராய்ச்சித் துறைகள் நேரடியாகத் தொழில் துறையின் நிருவாகத்தில் இருக்கின்றன. ஆராய்ச்சியின் விளைவுகள் நாட்டின் தொழில் துறை வளர்ச்சிக்கு அஸ்திவாரம் என்ற சித்தாந்தத்தில் இந்த ஏற்பாடு. மேலும் கானடாவில் உள்ள பல பெரிய தனியார் தொழில் ஸ்தாபனங்கள்,. தங்கள் லாபத்தில் ஒரு பகுதியைத் தங்கள் தொழில் சம்பந்தப்பட்ட ஆராய்ச்சிகளுக்காகச் சர்வகலாசாலைகளுக்கு மான்யமாக அளிக்கின்றன. அதைத் தவிர, அந்தக் கலாசாலைகளில் படித்து வெளிவந்து தங்கள் வாழ்க்கையில் வளம் கண்ட பல பழைய மாணவர்கள் தங்கள் உயில் மூலம் சம்பாத்தியத்தில் பெரும் பகுதியை நன்றிக் கடனாகத் தங்களை உருவாக்கிய கல்வி ஸ்தாபனங்களுக்கு விட்டுச் செல்கிறார்கள். ஆகவே சர்வகலாசாலைகள் செழிப்புடன் வளருகின்றன. ஆராய்ச்சி சாதனம் ஏதாவது தேவைப்பட்டால் பகுதிபகுதியாக 'பைல்'கள் இடம் மாறி அனுமதி பெற்று வரவழைக்க வேண்டிய 'சிவப்பு நாடா' முறையெல்லாம் அங்கு கிடையாது. டெலிபோன் மூலம் அடுத்த அரை மணி நேரத்துக்குள் தேவையானதை வரவழைத்துக் கொள்ள அந்த ஆராய்ச்சி நிலைய நிர்வாகிக்கு அதிகாரம் உண்டு. அந்த அதிகாரம் நல்ல முறையிலேயே உபயோகப்படுத்தப்படும் என்று மேல் அதிகாரிகள் நம்புகிறார்கள்.

மாண்ட்ரீல் சர்வகலாசாலையில் மீன் துறை ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த நண்பர் மோஹிதீன் தம் ஆராய்ச்சி நாட்களின் பெரும் பகுதியை அறுநூற்றைம்பது மைல்களுக்கு அப்பால் உள்ள 'கிராண்ட் ரீவீர்' என்னும் கடற்கரை நகரத்தில் கழிக்க வேண்டியிருந்ததாம். நம் தமிழ் நாட்டில் மண்டபம், போர்ட்டோ நோவோ முதலிய இடங்களில் சிறிய அளவில் இருப்பது போல அங்கு ஒரு பெரிய மீன்வள ஆராய்ச்சி நிலையமிருக்கிறது.



ஜுஹுப் முகமத் மோஹிதீன்

நண்பர் ரயிலில்தான் அடிக்கடி பிரயாணம் செய்தார். ஆனாலும் கனடியர்கள் அதிக எண்ணிக்கையில் விமானப் பிரயாணத்தை மேற்கொள்வதால் ரயிலில் அதிகக் கூட்டம் கிடையாது. அதற்காக அந்த ரயில்களில் வேகக் குறைவோ வசதிக் குறைவோ கிடையாது.

மாணவர்களுக்கு 'கிராண்ட் ரீவீர்' போன்ற கிராமப் பகுதிகளில், உள்ளூர்க் குடும்பத்தினருடன் 'பணம் கொடுத்துச் சாப்பிடும்' விருந்தாளியாகத் தங்கும் வசதி நிறைய இருக்கிறது. ஹோட்டலில் தங்குவதைவிட இது எவ்வளவோ சிக்கனமானது. இங்கிருந்து போகிறவர்கள் அந்நிய நாட்டுச் செலாவணி விஷயத்தையும் மனத்தில் நிறுத்திக் கொண்டாக வேண்டுமே.

'கிராண்ட் ரீவீர்' கிராம மக்கள் பெரும்பாலும் ஃபிரெஞ்ச் மொழி பேசுபவர்கள். நடைமுறை ஆங்கிலம் கொஞ்சம் வரும். ஆனால் மோஹிதீனுக்கு இடமளித்த மூதாட்டிக்கோ ஆங்கிலம் வராது. ஆனாலும் நாளடைவில் இந்த நிலை மோஹிதீனுக்குப் போதுமான பிரெஞ்ச் மொழி ஞானத்தை உண்டாக்கி விட்டது. அந்த அம்மையார் மிகவும் கண்டிப்பானவர். இரவு சாப்பாட்டை மாலை ஐந்தரை மணிக்கே போட்டு விட்டுக் கடையைக் கட்டி விடுவார். தூங்குவதற்குமுன் பசி எடுத்தால் பிஸ்கத் சாக்லெட் உதவியைத்தான் நாடிப் போக வேண்டும்.

நகரத்தையே பார்க்காமல் வாழ்க்கை முழுதும் கிராமவாசிகளாகவே இருப்பவர்கள் நிறைய இருக்கிறார்கள். நாகரிக வாழ்க்கையைக் கண்டு பயந்து ஒதுங்கும் பல இந்தியக் கிராமவாசிகளைப் போலவே அங்கும் நிறைய இருக்கிறார்கள். ஆனால் உறுதியுடன் வாழ்கிறார்கள். வளம் நிறைந்த பூமி.

மாண்ட்ரீல் நகரம் பெரிய ஹோட்டல்களுக்குப் பெயர் போனது. ஆனால் ஜினிவா, பாரிஸ் போன்ற நகர்களுடன் ஒப்பிடும்போது இங்கு ஹோட்டல் கட்டணங்கள் மிகக் குறைவு. அவர்கள் அளிக்கும் ஆகார வகைகளின் அளவு அதிகம். அதையும், எந்த வேளையிலும் சூடாக அளிக்கிறார்கள்.

ஐக்கிய அமெரிக்க நாட்டில் இருப்பதுபோல நீக்ரோப் பிரச்னை கானடாவில் இல்லை. ஆகவே வெள்ளையர் வெள்ளையரல்லாதார் என்ற பாகுபாடுகள் கிடையா. பாரதத்திலிருந்து வருபவர்களிடம் அவர்கள் நிறைய அக்கறையும்

அன்பும் காண்பிக்கிறார்கள். ஒன்டேரியோ பகுதியில் நிறையப் பஞ்சாபிகள் நிரந்தரமாகக் குடியேறியுள்ளார்கள். குருத்துவாரங்களையும் அமைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஃபிரெஞ்சுப் பாணியில் எழுப்பப்பட்ட பல பெரிய மாதா கோவில்கள் மாண்ட்ரீல் நகரை அலங்கரிக்கின்றன. கோடைக்காலம் ஏரி போல மௌன்ட் ராயல் என்னும் நகரின் மேடான பிரதேசத்தில் இருக்கும் ஏரி ஏராளமான பார்வையாளர்கள் கூடும் இடமாக இருக்கிறது.

ஏறத்தாழ இருபது லட்சம் மக்கள் கொண்ட மாண்ட்ரீல் நகருக்கும் இரண்டே லட்சம் பேர் வாழும் தலைநகரான ஒட்டாவாவுக்கும் நிறைய வித்தியாசம் உண்டு. பிந்தியது பரபரப்பற்று அமைதியுடன் அமைந்த நகரம். ஓங்கி வளர்ந்த மரங்களும் பச்சைப் பசேரென்ற புல் தரைகளும் எங்கும் வியாபித்திருக்கின்றன.

நிலவளத்தைப் போல் தொழில் வளமும் செழித்திருப்பது கானடா நாடு. காகிதத் தொழிலும் நீர் மின்சாரத் தொழிலும் அங்கு அமோகமாக வளர்ந்திருக்கின்றன. தமிழ் நாட்டில் உள்ள குந்தா நீர் மின்சாரத் திட்டம் கானடா நாட்டு உதவியுடன் நிறுவப்பட்டது என்பது தெரிந்ததுதானே!

ஃ ஃ ஃ

**பி**ரதி வருடமும் ஜூலை முதல் தேதி கானடாவின் தேசியத் திருநாளாகும். மக்களின் உற்சாகம் கட்டுக்கடங்காமல் இருக்கும். அன்று மாண்ட்ரீல் நகரம் நியூயார்க் நகரம் போலாகி விடுமாம்.

மாண்ட்ரீலை ஒட்டியுள்ள ஒன்டேரியோ நகரும் தொழில் வளம் சிறந்த நகரம். இங்கு ஆண்டுதோறும் ஒரு தொழிற் பொருட்காட்சி நடத்துகிறார்கள். அதைப் பார்க்க உலகின் பல பாகங்களிலிருந்தும் தொழில் அதிபர்கள் வந்து கூடுவார்களாம்.

அமெரிக்க டாலருக்கும் கானடா டாலருக்கும் அதிக வித்தியாசமில்லை. ஏறத்தாழ ஒரே மதிப்பு.

கானடாவுக்குப் போகிறவர்கள் நயாகரா நீர்வீழ்ச்சியைப் பார்க்காமல் வருவார்களா? அமெரிக்க நாட்டின் நியூயார்க் ராஜ்யத்தையும் (இதற்கும் நியூயார்க் நகரத்துக்கும் ஸ்நானப் ப்ராப்திகூட இல்லை!) கானடா நாட்டின் ஒன்டேரியோ ராஜ்யத்தையும் பிரிக்கும் வகையில் ராஜ்யத்துக்கு ஓர் அருவி வீதம் சுயமான முறையில் இரண்டாகப் பிரிந்து நயாகரா இங்கு கொட்டுகிறது. நூற்று அறுபத்து இரண்டு அடி உயரத்திலிருந்து குதிரை லாட உருவத்தில் இரண்டாயிரத்து அறுநூறு அடி அகலமுள்ள பாறை வழியாகக் கொட்டும் இந்த நீர்வீழ்ச்சியின் ஓசை பத்து மைல் தூரம் கேட்குமாம்!

ஜானைப் முகமக் கொதறிதேன் கல்லூரிப் பேராசிரியரல்லவா? கானடா நாட்டைப் பற்றிக் கேட்டதும் நயாகரா நீர்வீழ்ச்சியைப் போல் பொழிந்து தள்ளிவிட்டார். நயாகரா நீர்வீழ்ச்சியை நம்மால் நேரடியாகப் பார்க்க முடியாத போதிலும் பார்த்தவர்களையாவது சந்தித்துப் பேச முடிகிறதல்லவா?

















# மக்ளீன்ஸ்

உபயோகித்து
அந்த அதிகமான வெண்மையைப்
பாருங்கள்!





**இவ்விதம் சோதியுங்கள்**

1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த
பற்களை வெண்மையாக்குகிறது!

MTP/UP/2-63-TM



# சிரிக்கவும் சிந்திக்கவும்



லண்டனில் உள்ள 'இன்ஸ்டிடியூட் ஆப் காண்டெம்பரரி ஆர்ட்ஸ்' என்ற கலைச் சங்கத்தின் ஆதரவில் 1957–ம் ஆண்டில் ஓர் ஓவியக் கண்காட்சி நடைபெற்றது. அதில் மிஸ்டர் காங்கோ என்பவரால் வரையப் பட்ட 384 ஓவியங்கள் வைக்கப்பட்டிருந்தன.

படங்களைப் பார்த்த உயர்தர கலாரஸிகர்கள் சிலர் பிரமித்துப் போனார்கள். 'ஓவிய உலகில் இது ஒரு புதுமை, ஒரு புரட்சி!' என்று பாராட்டினார்கள். அந்தப் புதுமைச் சித்திர ஓவியரோ வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்லவில்லை.

''இக்கி.....கிக்கிக் கிக்கிக் கிக்கி.....'' என்றது அப்படம்.

ஏனென்றால், படத்தை எழுதியது லண்டன் மிருகக் காட்சிச் சாலையில் உள்ள காங்கோ என்ற மனிதக் குரங்கு.

டாக்டர் டெஸ்மண்ட் மாரிஸ் என்ற உயிர் நூல் நிபுணர், மிருகங்களின் கலை உணர்ச்சியைப் பரிட்சிப்பதற்காகக் காங்கோவைச் சித்திரம் எழுதத் தூண்டினார். அவர் அதன் முன்னர் ஆறு தட்டுக்களில் ஆறு வித வர்ணங்களை வைத்து அதனிடம் ஒரு குச்சியையும் கொடுத்து விடுவாராம். அது தன் இஷ்டப்பட்ட வர்ணங்களில் குச்சியைத் தோய்த்துச் சித்திரம் எழுதுமாம். ஒன்றை எழுதி முடித்தானதும் குச்சியை வைத்து விடுமாம்.



டாக்டர் பராஞ்சபே

நவீன ஓவியக் கலை குழந்தைத் தனமானதாக இருக்கிறது. மிருகத்தன அம்சமுள்ளதாக இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டி மறைமுகமாகப் பிகாஸோ போன்ற ஓவியர்களின் ஓவியங்களைப் பரிகசிப்பதற்காகவே, அந்த டாக்டர் இப்படிச் செய்தாரோ என்று சிலர் அபிப்பிராயப்பட்டார்கள்.

ஃ ஃ ஃ

பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் சிறைக் கைதிகளை 'மாட்சிமை தங்கிய அரசாங்கத்தின் விருந்தினர்கள்' என்று குறிப்பிடுவது வழக்கம். அதாவது கட்டாய விருந்தினர்கள் என்று ராஜஸ்தான் பிரதேசச் சிறை மந்திரி அவர்களுக்கு இப்போது ஒரு புதிய பெயர் கொடுத்திருக்கிறார். கைதிகளைக் கைதிகள் என்று குறிப்பிடக்கூடாதென்றும், 'ஸாதி'கள் அதாவது 'தோழர்கள்' என்று குறிப்பிட வேண்டும் என்றும் உத்தரவிட்டிருக்கிறார். தோழர்கள் என்ற வார்த்தையைத் தங்களுக்குள் பரிமாறிக் கொள்ளும் கம்யூனிஸ்டுகள் கைதிகளின் இந்தப் புதுப் பெயரைப் பெரிதும் வரவேற்பார்கள். ஏனென்றால் சிறையில் உள்ளவர்கள் எல்லோரும் தங்கள் கட்சியினர் என்று அவர்கள் இனி உரிமை கொண்டாடலாமல்லவா?

ஆமாம்! ஒரு மந்திரிக்குக் கைதியைத் தோழர் என்று அழைக்க வேண்டும் என்று ஏன், எதற்காக, எப்படித் தோன்றியது? இதைப் பற்றி நான் சிந்தித்துப் பார்த்த போது, வட இந்தியாவில் போலீஸ் இலாகாவில் பெரிய உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றிருக்கும் ஒரு பெரிய அதிகாரி ஒரு சமயம் என்னிடம் கூறியது ஞாபகம் வந்தது. அவர் பிரதேச மந்திரிகள் சிலரைக் குறிப்பிட்டுச் சொன்னார்: ''இந்த ஆசாமிகளெல்லாம் சிறையில் கைதிகளாக இருக்க வேண்டியவர்கள்!''

ஃ ஃ ஃ

ஒரு பிரபல ஹாஸ்ய ஆசிரியர் இறந்து விட்டதாகப் பத்திரிகைகளில் ஒரு தவறான செய்தி வெளியாயிற்று. உடனே ஒரு நண்பர் டெலிபோனில் அந்த ஆசிரியரைக் கூப்பிட்டார். ''தாங்கள் இறந்துவிட்டதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறதே, அது உண்மைதானா?'' என்று கேட்டார்.

''உண்மைதான். நான் இப்போது ஆவி உலகத்திலிருந்து தான் பேசிக்கொண்டிருக்கிறேன்'' என்றார் ஆசிரியர்.

டாக்டர் ரகுநாத் புருஷோத்தம பராஞ்சபேயை (அவர் தீர்க்காயுகடனிருக்கட்டும்) அவரது நண்பர்கள் இப்படி டெலிபோனில் கூப்பிட்டு விசாரிக்க வேண்டிய சந்தர்ப்பம் சமீபத்தில் ஏற்பட்டது. 'ஜெர்மன் நியூஸ் வீக்லி' என்ற பத்திரிகையில் அவரைப் பற்றிய ஒரு பாராட்டுக் கட்டுரையின் தலைப்பில் ''காலஞ்சென்ற டாக்டர் பராஞ்சபே!'' என்று குறிப்பிட்டிருந்தது. டாக்டர் பராஞ்சபே கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையில் 'ஸீனியர் ராங்குலர்' என்ற கணித மேதைப் பட்டம் பெற்ற முதல் இந்திய மாணவர். அவர் பேராசிரியர், சர்வ கலாசாலை உப அத்தியட்சகர், சமூகத் தொண்டர் எல்லாமாயிருக்கிறார்; மந்திரியாகவுமிருந்திருக்கிறார். தமது எண்பத்தி நான்காம் வயதில் செய்த ஒரு பிரசங்கத்தில் ''84 இன்னும் அவுட் ஆகவில்லை!'' என்று கிரிக்கெட் பாஷைத் தலைப்புடன் ஒரு பிரசங்கம் செய்தார்.

'ஜெர்மன் நியூஸ் வீக்லி' ஆசிரியர் பத்திரிகையின் அடுத்த இதழில் தமது தவறுக்காகத் தமது ஆழ்ந்த மன வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டு மேலும் கூறுகிறார்:

'' 'மரணமடையாதவர்கள் மரணமடைந்து விட்டதாக அறிவிக்கப் பட்டுவிட்டால், அவர்கள் நீண்ட காலம் வாழ்ந்திருப்பார்கள்' என்று ஜெர்மனியில் சொல்வதுண்டு. டாக்டர் ஆர். பி. பராஞ்சபே விஷயத்திலும் இப்படியே நிகழுமென்று நம்புகிறேன்.''

# தீர்த்தக் கரையினிலே

ஏ.எஸ்.ராகவன்

அதெல்லாம் பழைய கதை: முன்னைப் பழைமைக்கும் பழைமையாய்ப் போன கதை. ஆனாலும் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் நெஞ்சில் நிலைவெடுக்கிறது அதை நினைத்தால்...

மன்னியுங்கள். இருபது ஆண்டுகள் பின்னோக்கி உங்களை அழைத்துச் செல்ல வேண்டியிருக்கிறது. அதனாலென்ன? ஆண்டுகள் இருபதானாலும் ராஜ வாய்க்காலில் ஓடும் தண்ணீர் பழசாகிப் போய்விடவில்லை. மதகடியில் சுழித்துப் பாயும் அதன் வேகமும் வீச்சும் பழசாகிப் போய்விடவில்லை. 'ராஜ வாய்க்கால்' என்று யார் பெயர் சூட்டினார்களோ, இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு அது பெருகுவது ராஜகம்பீரம்தான். வழி நெடுக 'பராக்' கூறிக் கொண்டு வரிசை கட்டி நிற்கிற தென்னைகளும், வழிவிட்டு எட்ட நின்றே பார்த்து மகிழும் வாழை, கரும்பு, நெற்பயிர்களும் அதன் அரசாட்சிச் சிறப்புத்தான். இந்த வாய்க்காலின் ஒரு கரையில் ஈசுவரன் கோயிலும், மறு கரையில் பிள்ளையார் கோயிலும் இருக்கின்றன. இந்த இரண்டு கோயில்களையும் இணைக்கும் பாலத்தோடு நடந்து தெற்கே போனால் காவேரி வழிமறிக்கும்.

காரணமில்லாமல் பாலத்தையும் கோயில்களையும் உங்களுக்குக் காட்டுவேனா? வாய்க்காலின் ஒரு கரையில் பிரம்மச்சாரியும் மறு கரையில் கிருஹஸ்தரும் கோயில் கொண்டிருப்பதற்கும் என் வாழ்க்கைக்கும் நிறையத் தொடர்பு உண்டு.

அப்போது எனக்குப் பன்னிரண்டு வயது இருக்கலாம். பூமாவுக்குப் பத்து வயது. கட்டுச் சோற்றைக் கட்டிக் கொண்டு இரண்டு பேரும் பள்ளிக்கூடம் போய் வந்து கொண்டிருந்த பருவம். பூமாவுக்குத் தலை கொள்ளாத கேசம். தாழம்பூ வைத்துப் பின்னி விட்டால், கருநாகம் ஒன்று தாழை மடலில் படுத்திருப்பது போலவே இருக்கும். அவளுக்குப் பின்னாலே கொஞ்சிக் கொஞ்சி அது ஓடி வரும். நடந்துதான் போவோம் பள்ளிக்கூடத்துக்கு. இரண்டு மைல் தூரம் நடப்பதே எங்களுக்குத் தெரியாது.

ஒரு நாள். அன்று விடுமுறை. மாலை நேரத்தில் பிள்ளையார் கோயிலில் நான் உட்கார்ந்திருந்தேன். என்னவோ மனசே சரியாக இல்லை. வீட்டில் சித்திக்கும் எனக்கும் மனஸ்தாபம். அடிக்கடி இப்படி நேருவது உண்டுதான். ஆனால் அன்று சித்தியின் முணுமுணுப்பும் என் கோபமும் வெவ்வேறு கோணங்களில் தொடங்கி, சமாதானமாகப் போக முடியாத அளவுக்கு மிஞ்சி விட்டபடியால், 'சாப்பாடு வேண்டாம், போ' என்று உதறிவிட்டு வந்து விட்டேன். பசி தாங்கவில்லை.

''என்னடா ராஜு, யோசனை பலமாயிருக்கு?'' என்ற குரல் கேட்டது. நிமிர்ந்து பார்த்தேன். பூமா நின்று கொண்டிருந்தாள் எதிர்க் கரையில். அவள் கையில் எண்ணெய்க் கிண்ணம் இருந்தது. கோயிலுக்கு விளக்கேற்ற வந்திருப்பாள் போலிருக்கிறது.

''ஒன்றுமில்லையடி'' என்றேன்.

''கோயிலுக்கு வருகிறாயா?''

''ஏன்? உன் அத்தை வரவில்லையா?''

''வரல்லே. அவளுக்கு என் மேலே கோபம்.''

''இந்த அத்தைகளுக்கும் சித்திகளுக்கும் கோபித்துக் கொள்வதைத் தவிர வேறே காரியம் கிடையாதோ?'' என்றேன் நான்.

பூமா பாலத்தைத் தாண்டி வந்தாள். அவளுடைய முகம் வாடியிருந்ததை அப்போதுதான் பார்த்தேன். எனக்கு ஒரு சித்தி வாய்த்த மாதிரி அவளுக்கு ஓர் அத்தை வாய்த்திருக்கிறாள். இரண்டு பேருக்கும் ஒரே ஒரு வித்தியாசம். சித்தியின் போக்கு பொறுமையிலும் ஆத்திரமையிலும் கிளைக்கும். அத்தையின் போக்கு அபரிமிதமான அன்பிலும் அசட்டுத்தனத்திலும் முளைவிடும். இரண்டுமே ஆபத்துத்தான். எல்லை மீறினால் அன்பு கூட ஆபத்தாக முடிகிறது என்பதை நான் புரிந்து கொண்டேன், கொஞ்ச நாட்கள் கழித்து.

''நாம் இரண்டு பேரும் ஒரே மாதிரி கஷ்டப்படறோம்டா, ராஜா...'' என்றாள் பூமா என் அருகில் வந்து.

''ஆமாம்'' என்றேன் நான்.

''உனக்கும் அம்மா இல்லை. எனக்கும்அம்மா இல்லை. உன் அம்மாவும் என் அம்மாவும் அவசரமா மேல் லோகம் போயிட்டா'' என்று நீண்ட பெருமூச்சு விட்டாள் அவள்.

''அங்கே போயி என்னதான் செய்வாளோ?'' என்றேன் ஆற்றாமையுடன்.

''அத்தை சொல்றா, அங்கே உன் அம்மாவும் என் அம்மாவும் தாயக் கட்டம் ஆடுவாளாம்.''

''உக்கும்.... இல்லவே இல்லை... புலிக்கட்டம் தான் ஆடுவா... அது தான் கஷ்டமான ஆட்டம். நேத்திக்குச் சித்தியை நான்சோபானே

ஆக்கினேன் புலிக்கட்டத்திலே. சித்தி ஒரு மக்குப் பிளாஸ்திரிடி, பூமா.... ஆடவே தெரியல்லே'' என்றேன்.

''நான் அத்தையைத் தாயக்கட்டத்தில் வெட்டி வெட்டி சோடாவை ஆக்கினேன்'' என்று சிரித்தாள் பூமா.

எங்கள் துக்கம் எங்கே போயிற்றோ. இரண்டு பேரும் படித் துறையில் உட்கார்ந்து கொண்டு தண்ணீரில் பெரிதும் சிறிதுமாய் நீந்தும் மீன்களை வேடிக்கை பார்க்க ஆரம்பித்துவிட்டோம். பூமா கால்களை நீரில் மலரவிட்டாள். மஞ்சள் வண்ணப் பாதங்களில் மருதோன்றி கூட்டிய நலங்கு மின்ன, முகமாகிய குளத்தில் இரண்டு மீன்கள் துள்ள அவள் வீற்றிருந்த அழகும், மீன் கொத்த வரும்போது பதறி அவள் காலை இழுத்துக் கொண்ட காட்சியும் இப்போது நினைத்தாலும் பரவசமூட்டுகின்றன.

அவள் கலகலவென்று சிரித்துவிட்டாள். நானும் சிரித்தேன். படித்துறையே எதிரொலித்துச் சிரித்தது.

''நன்னாயிருக்குடி.... கோயிலுக்கு எண்ணெய் போட அனுப்பினால் இங்கே வந்து உட்கார்ந்து கொண்டு கூத்தடிக்கிறயே. காணுமே, காணுமே என்று ஊரெல்லாம் தேடிவிட்டு வரேன்'' என்று அங்கலாய்த்துக் கொண்டு வந்துவிட்டாள் பூமாவின் அத்தை.

''இருடா, ராஜு வரேன்'' என்று வேகமாக ஓடினாள் பூமா.

அவள் போனதும் என் வயிறு மறுபடியும் புரட்சி செய்ய ஆரம்பித்துவிட்டது. 'இந்தச் சித்தி தட்டு நிறையச் சாதத்தை வைத்துக் கொண்டு கெஞ்சினாலும் இனிமேல் அதைத் தொடுகிறேனா, பார்!' என்று கறுவிக்கொண்டிருந்தேன். போன சுருக்கில் பூமா திரும்பி வந்துவிட்டாள். ஓட்டமாக ஓடி வந்ததால் மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கிற்று. ''ராஜு! கண்ணை மூடிக்கோ'' என்றாள்.

''எதுக்காக?'' என்று கேட்டேன்:

''மூடுன்னா, மூடணும்.''...

நான் கண்ணை மூடிக்-கொண்டேன்.

''வாயைத் திற.''

''எதுக்காக?''

''திறன்னா திறக்கணும்...''

நான் வாயைத் திறந்தேன். அடுத்த கணம் வாயில் மட்டுமா, அடிவயிற்றிலிருந்து உடம்பு முழுதும் உமிழ்நீர் சுரந்து அவள் என் வாயிலிட்ட நெய் அப்பத்தை ஜீரணிக்கத் தொடங்கிற்று. நான் கண்ணைத் திறந்தேன். எதிரே பூமா கலகலவென்று சிரித்துக் கொண்டு நின்றாள். பாவாடையின் ஒரு தலைப்பு முழுவதும் நெய் கசிந்து, அந்தப் பகுதியே கறுப்பாக இருந்தது. மறைத்து எடுத்து வந்திருக்கிறாள் அப்பத்தை.

''பூமா! அத்தைக்குத் தெரியாமலா அப்பத்தைக் கொண்டு வந்தாய்?'' என்றேன் கவலையோடு. அதற்காக அத்தை அவளைச் சும்மா விடமாட்டாளே!

''ஆமாம்.... நீ மத்தியானம் சாப்பிடவே இல்லைதானே? என்னிடம் சொல்லாமல் தானே மறைத்தாய்?'' என்றாள் அவள்.

''நான் சாப்பிடவில்லை என்று யார் சொன்னது?''

''யாரும் சொல்லணுமோ? உன் முகமே சொல்றதே...''

''அதெல்லாமில்லே.... நான் சாப்பிட்டு விட்டுத்தான் வந்தேன்'' என்றேன்.

அவள் என்னையே உற்றுப் பார்த்தாள். அந்தப் பார்வையைத் தாங்க முடியவில்லை என்னால். அவளிடம் தோற்றுப்போக விருப்பமில்லாததனாலோ அல்லது பிடிவாதத்தாலோ அவளையே குற்றம் சாட்ட வேண்டுமென்று தோன்றிவிட்டது எனக்கு. ''நீதான் அப்பத்தை மறைத்து எடுத்து வந்திருக்கிறாய். நான் எதையும் மறைக்கவில்லை'' என்றேன்.

ஆனால் நான் என்ன கண்டேன்? பூமா அத்தையோடு வீட்டுக்குப் போனதும் போகாததுமாகச் சித்தி வந்திருந்தாள் என்பதும், அவள் அத்தையிடம் என் உண்ணாவிரதப் போராட்டத்தைச் சொல்லி முறையிட்டிருந்தாள் என்பதும் எனக்குத் தெரியாது. ''நீ பொய் சொல்றேடா, ராஜு... எனக்கு எல்லாம் தெரியும்... இதோ பார், இந்தத் தடவை உனக்கு மன்னிப்பு... இனிமேல் நீ பொய் சொல்லக் கூடாது. தெரிகிறதா?'' என்றாள் பூமா.

வேறு வழியில்லாமல் ''ஆகட்டும்டி'' என்றேன்.

''எழுந்திரு'' என்றாள் அவள்.

''எதுக்காக?''

''எழுந்திரேன், சொல்றேன்.''

நான் எழுந்தேன். அவள் என் கையைப் பிடித்துக் கொண்டு பிள்ளையார் முன்னால் கொண்டு போய் நிறுத்தி, ''தோப்புக்கரணம் போடு'' என்றாள்.

''எதுக்காக?'' என்றேன்.

''இனிமேல் பொய் சொல்றதில்லே.... இனிமேல் வீட்டிலே என்ன நடந்தாலும் பூமாகிட்ட சொல்றேன்... வயித்தைப் பட்டினி போடறதில்லே.... அப்படின்னு சொல்லிண்டு தோப்புக்கரணம் போடு.''

''நீயும் போடு'' என்று முரண்டினேன்.

''எதுக்காக?'' என்று கேட்டாள் அவள்.

''இனிமே அத்தைக்குத் தெரியாம அப்பம் எடுத்து வரதில்லே... அப்படியே கொண்டு வந்தாலும் பாவாடையிலே மறைச்சு எடுத்துக்கொண்டு வரதில்லே.... அப்படியே கொண்டு வந்தாலும் கண்ணை மூடி வாயைத் திறக்கச் சொல்றதில்லே.''

அவள் சிரித்தாள். இரண்டு பேருமே தோப்புக்கரணம் போட்டோம். பிள்ளையார் சாட்சியாக அன்று நானும் பூமாவும் செய்து கொண்ட அந்த ஒப்பந்தம் எங்கள் பிஞ்சு உள்ளங்களில் மறைவு என்பதையே இல்லாமற் செய்து விட்டது.

நாட்கள் ஓடின.

இப்போது பள்ளிக்கூடத்துக்கு நடந்தே போய் வர வேண்டிய அவசியமில்லாதபடி, அப்பா எனக்கு ஒரு சைக்கிள் வாங்கித் தந்திருந்தார்.

''பூமா, போவோமா?'' என்று கேட்டபடி சைக்கிளை விட்டு இறங்காமல், 'ஸ்டைலாக'த் தரையில் ஒரு காலை ஊன்றிக்கொண்டு நின்றேன்.

## கல்கி

### சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | 15 - 00 | 7 - 50 |
| பர்மா, மலேயா, வெளி நாடுகள் | 18 - 00 | 9 - 00 |

தனிப் பிரதி விலை 30 காசு

*சந்தா தொகை முன்னதாக அனுப்பப் படவேண்டும். வி.பி.பி. கிடையாது.*

மானேஜர் :
கல்கி காரியாலயம், சென்னை -10




# ஹெர்குலிஸ்

வெறும் ஸைக்கிள் மட்டுமன்று—
வாழ்நாள் முழுதும் உழைக்கும்
ஓர் உறுதுணை



12 வருடங்கள் பறந்துவிட்டன. ஹெர்குலிஸ் தொடர்ந்து தந்தைக்கும் — இப்போது மகனுக்கும்—பணி புரிந்து வருகிறது. எப்போதும்போல் நம்பிக்கைக்கு ஏற்றதாக விளங்குகிறது.

நீங்கள் ஒரு ஹெர்குலிஸ் ஸைக்கிள் வாங்கும்போது உங்கள் வாழ்க்கையுடன் அது ஒன்றிவிடுகிறது. ஆண்டுகள் செல்லச்செல்ல உங்கள் வாழ்க்கை மாறும் ... உத்தியோக உயர்வுகள் கிடைக்கும் ... உங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாவார்கள்...மணம் புரிந்து வேறிடங்களில் புது வாழ்க்கை தொடங்குவார்கள். ஆனால் உங்கள் ஹெர்குலிஸ் எப்போதும் உங்களுடனேயே இருக்கும் — எப்போதும் நன்கு பணி புரிந்தபடியே இருக்கும்.

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ் 53

PRT-TIC H-2912

"ஊஹூம்... நீ போ" என்று பதில் வந்தது.

"ஏன்? நீ வரல்லியா?"

"நடந்து வரேன்... நீ சைக்கிளில் போகிறவன் ஆச்சே!"

"அதனால் என்ன? பின்னாலே உட்கார் நீ!"

"ஊஹூம்... நீ போ."

இவ்வளவு நேரமும் கதவுக்குப் பின்னிருந்துதான் பேசினாள் என்பதை அப்போதுதான் நான் புரிந்து கொண்டேன். பூமா ஏன் என்னுடன் வர மறுத்தாள் என்று புரியவில்லை. இருந்தாலும் சில சமயம் இப்படிப் பிடிவாதம் பிடிக்கிற குணம் அவளுக்கு உண்டு என்பதைப் பழகி அறிந்திருந்தவனாதலால் சிரித்துக் கொண்டே சைக்கிளை மிதிக்கலானேன். ஒரு சாம்ராஜ்யமே வாய்த்துவிட்ட பெருமிதம் — அந்தச் சைக்கிளில் ஆரோகணித்ததும்.

இரண்டு மைல் தூரத்துக்கு நாலு நிமிடங்கள் போதும். சைக்கிளைச் சின்னாள் தோட்டத்துக்கருகில் நிறுத்திவிட்டுப் பூமா வரட்டுமென்று காத்திருந்தேன். அவள் வருவது தொலைவிலேயே தெரிந்தது. ஆனால் இதென்ன? பூமாவா அது? பளிச்சென்று கதவிடுக்கில் அவள் நின்ற காரணம் இப்போதுதான் எனக்கு விளங்கிற்று. முன் போல் மேல் சட்டையும் பாவாடையும் மட்டுமல்லாது, தாவணி கூடியிருந்தது பூமாவிடத்தில்.

"இதனால்தான் வர மாட்டேன்னியா?" என்று கேட்டேன்.

"எதனால்?" என்று திருப்பிக் கேட்டாள் அவள்.

"தாவணி போட்டுக் கொண்டிருக்கியே அதனாலே" என்றேன்.

"போடா, நீ ரொம்ப மோசம்" என்று சிரித்தாள் அவள். பிறகு அவளாகவே, "இனிமேல் நீ சைக்கிளிலே போவே... நான் எப்படி வரதாம்?" என்று கேட்டாள்.

"நீயும் சைக்கிள் விடக் கற்றுக்கோயேன்" என்றேன்.

"அழகுதான்... அத்தை சும்மா விடமாட்டாள்!" மறுப்பிலே ஒப்புதலும் இருந்ததைப் புரிந்து கொண்டு விட்டேன்.

"அத்தைக்குத் தெரியாமல் கத்துக் கொள்ளலாம்டி. பள்ளிக்கூடம் விட்டதும் தினமும் ஓர் அரை மணி கத்துக்கோயேன். ஒரு வாரத்திலே வந்துடும்" என்றேன்.

அன்று மாலையே அவளை வழி மறித்து, சைக்கிள் விட்டால்தான் ஆச்சு என்று முரண்டு செய்து, அவளை ஏற்றி, விளையாட்டு மைதானத்தில் ஒரு ரவுண்டு வந்தேன். விறைப்பாக உட்கார்ந்துகொண்டு, பிரமித்து, ஆசையும், பயமும் இரண்டு 'பெடல்'களையும் உந்த அவள் பட்ட பாடு!

நல்ல வேளை, அத்தையால் கண்டு கொள்ள முடியவில்லை. மறுநாளும் பயிற்சி தொடர்ந்தது. ஆனால் அன்று வலது காலுக்குக் கீழே ஒரு சிராய்ப்புப் பட்டு விட்டது.

"சைக்கிள் விடணும்னு ஒரு சின்னக் காயமாவது படாது முடியாது" என்றேன்.

"போடா. அத்தை சண்டை பிடிப்பாள்."

"அவளிடம் சொன்னால்தானே?"

"எப்படிடீ காயம் பட்டதுன்னு கேட்டால் என்ன சொல்றதாம்?"

"வேற எதையாவது சொல்லேன்...விளையாடும்போது கீழே விழுந்துவிட்டேன், அப்படி, இப்படின்னு ஏதாவது..."

ஆனால் அது பலிக்கவில்லை. அத்தையின் ஆராய்ச்சிக் கண்கள் அதைக் கண்டு கொள்ளவில்லை என்றாலும் எதிர் வீட்டுச் சுப்புணி இருக்கிறானே அவன் போய் ஒன்றுக்குப் பத்தாகப் பற்ற வைத்து விட்டான். வந்தது வினை. அப்பாவிடமே பிராது கொடுத்து விட்டாள் அத்தை. என் முதுகு தப்பினது பெரிதாகப் போயிற்று.

பூமாவுக்கு அதற்குப் பிறகு பயிற்சி தரும் பாக்கியம் எனக்கு வாய்க்கவில்லை. அவளைத் தனியே காண்பதும் அரிதாகி விட்டது.

ஆயிற்று. அடுத்த மாதம் பெரிய பரீட்சை. அது முடிந்ததும் மேல் படிப்புக்காக என்னைத் திருச்சிக்கு அனுப்புவதாக அப்பா முடிவு செய்திருந்தார். அங்கே போய்விட்டால் அப்புறம் பூமாவைப் பார்க்கவே முடியாது.



எனக்கென்னவோ அவளைப் பார்க்காமல் இருப்பது சாத்தியமாகத் தோன்றவில்லை.

"பூமா!" ஒருநாள் அவள் தனியே பள்ளிக்கூடத்துக்கு வந்துகொண்டிருந்தபோது மறித்துக் கொண்டேன்.

"என்ன?" என்று கேட்டாள் அவள்.

"நீ ஏன் பிள்ளையார் கோயிலுக்கு வரவில்லே?"

"அந்தையே கோயிலுக்குப் போய்விட்டு வந்துடறு... இப்போதெல்லாம் என்னை அனுப்பறதில்லே."

"சைக்கிள் விட ஆசை இல்லையாடி உனக்கு?"

"ஆசையிருந்தா நடக்குமா?"

"உக்கும்... நீ பயப்படறே, அதான்."

"எனக்கு என்ன பயம்?"

"பின்னே ஏன் என்னைப் பார்த்தாலும் ஓடறே?... உட்கார் பின்னாலே... அட, சும்மா உட்கார்... யாரும் இல்லே இங்கே... பார்த்தாத்தான் பார்க்கட்டுமே... என்ன செய்துடுவானாம்?"

பூமா உட்கார்ந்தாள். அவளை ஏற்றிக் கொண்டு போகிற பெருமையில் சைக்கிளை அழுத்தி மிதித்தேன். 'ஸ்கூட்டர்' எல்லாம் எந்த மூலைக்கு? காற்றாய்ப் பறந்தது சைக்கிள். "டேய், டேய்...... மெள்ளப் போடா எனக்குப் பயமாக இருக்கு" என்று கத்தினாள் அவள்.

நாலு ரோடுகள் திரும்பி, ஜுபிலி வளைவு தாண்டி, பள்ளிக்கூட மதிலை நெருங்கியதும் 'சரக்'கென்று பிரேக் போட்டேன். அவள் இறங்கினாள். வெற்றி வீரனைப் போல் நான் நிமிர்ந்து பார்த்தேன். நுழை வாயிலுக் கருகே, சுப்புணி, ராமசாமி, கேப்ரியல், பத்மநாபன் ஆகிய நால்வரும் நின்றுகொண்டிருந்தார்கள். சுப்புணிக்கு முகம் சிறுத்துப் போய் விட்டது.

மறுநாள் பூமாவைக் காணவில்லை. சின்னான் தோட்டத்துக்கருகில் காத்திருந்து பார்த்தேன். மணி அடிக்க இரண்டு நிமிடங்கள்தானிருந்தன. இனியும் தாமதமானால் தலைமை ஆசிரியரின் பிரம்புக்குத் தப்ப முடியாதென்று சைக்கிளை எடுத்தேன். நாலு ரோடு, ஜுபிலி வளைவு தாண்டிப் பள்ளிக்கூடத்து மதிலை அடைந்ததும் வண்டி நின்றது. தற்செயலாக என் பார்வை பள்ளி மதிலைத் தீண்டிற்று. ஒரு கணம் என் உடலே ஆடிவிட்டது. நெருப்பைக் கொட்டினாற்போலிருந்தது. அங்கே கொட்டை எழுத்துக்களில், "ராஜு — பூமா காதல் ஜோடி — உஷார்!" என்று எழுதியிருந்தது.

'பியூன்' முத்துசாமி பரிதாபமாக என்னைப் பார்த்தான்.

வகுப்பறைக்குள் சங்கேதச் சிரிப்பொலிகள் கிளர்ந்தெழுந்தன.

கடவுள் வாழ்த்துப் பாடும்போது எல்லாக் கண்களும் என்னையே பார்த்தன.

பாடல் முடிந்ததும் தலைமை ஆசிரியர் 'மைக்'கின் முன் வந்தார். அவரைப் பார்க்கவே என் கண்கள் கூசின. "மாணவர்களே, இன்று என் மனம் வேதனைப்படும்படியான ஒரு சம்பவம் நடந்திருக்கிறது...நம் பள்ளிக் காம்பவுண்டுச் சுவரில் யாரோ ஏதோ எழுதியிருக்கிறார்கள்...." மாணவர்களிடையே அமுங்கிய சிரிப்பொலி எழுந்தது. "சிரிக்காதீர்கள்... இது சிரிப்பதற்குரிய விஷயமல்ல. எஸ். எஸ். எல். சி. மாணவன் ராஜு வகுப்புக்குச் செல்லு முன் என்னை வந்து பார்க்கட்டும்."

தலை குனிந்தபடியே அவர் அறைக்குள் நுழைந்தேன்.

"ராஜு! இதை நான் எதிர்பார்க்கவில்லே. இந்தப் பள்ளிக்கூடத்துக்கு உன்னால் எப்படிப் பட்ட பெயர் வந்திருக்கிறது, பார்த்தாயா?" என்றார் வருத்தத்தோடு.

"ஸார்... ஸார்... நான்..."

"என்னுடைய இத்தனை வருஷ சர்வீஸில் இப்படி எதுவும் நிகழ்ந்ததில்லே..." பிரம்பைக் கையில் எடுத்தார் அவர்.

நான் பதறினேன். "ஸார்.... ஸார்... எனக்கு எதுவுமே தெரியாது ஸார்...பூமாவையே வேணுமானாலும் கேட்டுப் பாருங்கள் ஸார்..." என்றேன். அழுகை வந்துவிட்டது.

'சைக்கிளிலே அவனை உட்கார்த்திக் கொண்டு வந்தேன், சார்... அதைத் தப்பாக எடுத்துக் கொண்டு கன்னா பின்னா வென்று எழுதியிருக்காங்க ஸார்...''

என் அழுகை, குரல், பரிதாபமான தோற்றம், இவற்றையெல்லாம் மீறி உண்மையாகவே நான் அப்பாவி என்பதை உணர்த்தி ஏதோ ஒன்று எல்லாமாகச் சேர்ந்து தலைமையாசிரியரின் மனத்தில் இந்தச் சம்பவத்தின் அடிப்படைவேறு ஏதோதான் என்பதை உணர்த்தி விட்டன போலும். அவருடைய பிரம்பு என்னுடைய முதுகைப் பதம் பார்க்கவில்லை. நான் தப்பினேன். ஆனால் அன்று அவரிடம் நான் தண்டனை பெற்றிருந்தால் என் வாழ்க்கையின் போக்கே மாறியிருக்கக் கூடும் என்று இப்போது தோன்றுகிறது.



'' நீங்க ரொம்ப வருஷத்துக்கு முன்னாலே எழுதின புத்தகத்தைப் போன வாரம்தான் நான் வாங்கினேன்!''
'' ஓகோ! நீங்கதானா வாங்கியது?''

''சரி, நீ போகலாம். ராமசாமியை வரச் சொல், இங்கே'' என்றார் அவர்.

ராமசாமி போனான். வரும்போது அவனுடைய முகமும் முதுகும் சிவந்திருந்தன. காம்பவுண்டுச் சுவரில் அவதூறாக எழுதிய புண்ணியவான் அவன்தான் என்பது வெட்ட வெளிச்சமாகி விட்டது.

அன்று மாலை மிகவும் வருத்தத்துடன் பிள்ளையார் கோயில் படித்துறையில் நான் உட்கார்ந்திருந்தேன். பூமா வரமாட்டாளா என்றிருந்தது. அவளிடம் நடந்ததை யெல்லாம் சொல்லி ஒரு குரல் அழ வேண்டும் போலிருந்தது. மாலை மயங்கி இருள் பரவும் நேரமாகிவிட்டது. படித்துறை விளக்கு 'முணுக் முணுக்'கென்று ஒளி விட ஆரம்பித்தது. தண்ணீருக்குள் ஓடும் மீன் போல அந்தச் சிமெண்ணெய் விளக்கின் நாக்கு அசைந்து கொண்டிருந்தது.

பூமா வர மாட்டாளா?

ஊஹூம். அவள் எங்கே வரப் போகிறாள்?

ஒவ்வொரு கல்லாகத் தண்ணீருக்குள் எறிந்து கொண்டிருந்தேன். நூறு கல் எறிவதற்குள் அவள் வந்துவிட வேண்டும். வராவிட்டால்...! வராவிட்டால் நேரே அவளிடமே போய்ச் சண்டை பிடித்து விடுவது. கொட்டுக் கொட்டென்று நான் காத்திருப்பது அவளுக்கு ஏன் தெரியவில்லை?

தொண்ணூற்றெட்டு, தொண்ணூற்று ஒன்பது. கல் கரைந்ததே தவிர, பூமாவின் மனம் கரையவில்லை. அவள் வரவில்லை. எழுந்து நின்று ஆத்திரத்தோடு அந்த நூறாவது கல்லைத் தூர வீசி எறிந்தேன்.

அடுத்த கணம் 'ஆ' என்ற அலறல் கேட்டது. நான் திடுக்கிட்டேன். அந்த நூறாவது கல் யாரையோ தாக்கி விட்டது. படித்துறை விளக்கின் மங்கிய ஒளியில் அடிபட்டது யார் என்று தெரியவில்லை. அவசர அவசரமாகப் பாலத்தைத் தாண்டிச் சென்று பார்த்தபோது.. என்னத்தைச் சொல்ல! — அடிபட்டவள் பூமாதான். மஞ்சளைப் பழிக்கும் எழில் வதனத்தில்சிவப்புக்கறை நீண்டிருந்ததைக் கண்டதும் என் உள்ளம் வெந்தது. மேல் துண்டைக் கிழித்துக் கட்டுப் போட்டேன். ''இந்த நேரத்திலே கொஞ்சம் ஜாக்கிரதையாக வரணும் நீ'' என்றேன்.

அவள் ஒன்றும் சொல்லவில்லை. பெருமூச்சு விட்டபடியே பாலத்தில் நடந்தாள். நான் பின் தொடர்ந்தேன். பிள்ளையார் கோயிலை அடைந்ததும் அவள் என்னை உற்றுப் பார்த்தாள். ''ராஜு! பள்ளிக்கூடத்திலே என்ன நடந்தது சொல்லு... எனக்கு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போலிருக்கு...!'' என்றாள்.

''உனக்கு யார் சொன்னா?'' என்று கேட்டேன். அவளுக்கு அதெல்லாம் எட்டியிருக்கும் என்று நான் நினைக்கவில்லை.

''யாரும் சொல்லணுமோ? உன் முகமே சொல்றது.''

''சுவத்திலே கன்னா பின்னான்னு எழுதியிருந்தான். ஹெட் மாஸ்டர் ரொம்பக் கோவிச்சுண்டார்...''

அவள் இலேசாகச் சிரித்துக் கொண்டாள். ஏன் சிரித்தாளோ எனக்குப் புரியவில்லை. ஆனால் பழைய பூமா இல்லை அவள் என்பது மட்டும் எனக்குப் புரிந்தது. ''ராஜு, பிள்ளையார் முன்னாலே நிக்கிறே நீ... மனசிலே இருக்கிறதை மறைக்காமல் சொல்லு...'' என்றாள் அவள் அழுத்தமாக, நிதானமாக.

எனக்கு ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை அவள் என்ன கேட்கிறாள்? மனசில் இருப்பதை மறைக்காமல் சொல்ல வேண்டும் என்கிறாளே, எதைச் சொல்லச் சொல்கிறாள்?

''பூமா... என் மனசிலே இருக்கிறதைச் சொல்கிறேன். பிள்ளையார் முன்னாலே நமக்குள்ளே ஒளிவு மறைவு இல்லேன்னு தோப்புக்கரணம் போட்டிருக்கோமில்லையா? பூமா, உன் மனசு கஷ்டப்படக் கூடாது. அதுதான் என் மனசிலே இருக்கிறது. நீ நன்னா இருக்கணும்டி. அதுதான் என் ஆசை.'' ஒவ்வொன்றாக நினைவுபடுத்திச் சொல்பவன் போலச் சொல்லிக் கொண்டே வந்தேன். இவற்றையெல்லாம் மீறிக் கொண்டு என் இதயத்திலிருந்த வேறு ஒரு முக்கியமான உணர்வு, அவளிடம் நான் கொண்டிருந்த அன்பின் பெருமிதத்தைச் சொல்லத் துடித்தது. அந்த உணர்வை இத்தனை நாட்கள்



## வீட்டுச் சமையலுக்குச் சுவை கூட்டுவது
# அமுல் வெண்ணெய்






அமுல் வெண்ணெயினால் எத்தனை எத்தனை உணவு வகைகள் ஆக்கமுடியும் என்பதைக் கண்டு நீங்கள் வியந்து மகிழ்வீர்கள். கேக்கு, பிஸ்கட்டுகள்... ஹண்ட்வோ காரி தோக்ளா... ஆகிய எல்லாவற்றையும் அமுல் வெண்ணெயினால் தயாரித்து இன்பநயம் சுவையுங்கள். மறவாதீர்கள்; அமுல் வெண்ணெயினால் சமைத்த எந்தப் பண்டமும் கூடுதலான போஷாக்கை உடமக்கு அளிக்கிறது. கடைந்தெடுத்த பண்ணைப் புதுமையோடு ஐந்தே மணி நேரத்தில் பால் பாண்டத்திலிருந்து வெண்ணெய்ப் பொட்டணத்திற்கு மாறும் தூய, புத்தம்புதிய பாலேடு செறிந்த அமுல் வெண்ணெய், தென்புதரும் சூரிய ஒளி வைட்டமின்களான ஏ, டி இரண்டும் வளப்பமாக அடங்கியது — ஆகவே வளரும் குழந்தைகளுக்கு இன்றியமையாதது.

பண்ணைப் புதுமை மாறாத சுத்தமான பால்-ஆடை...

# அமுல் வெண்ணெய்

அமுல் உங்கள் உணவுக்கு மதிப்பிடமுடியாத உபரியான போஷாக்கின் பலனை யளிக்கிறது.

கெய்ரா கோ-ஆபரேட்டிவ் தயாரிப்பு-விலைமதிப்பற்றது

கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆப்ரேட்டிவ் மில்க் ப்ரட்யூஸர்ஸ் யூனியன் லிட்.



CAS/KMP.12 TAM


A Pump for Every Purpose
Water all day at any height, with or without overhead tanks, for homes, offices, hotels, hospitals, gardens, garages, stables, municipalities and public utility concerns.
Pumping of every type of industrial fluid—
Oils, acids, alkalis, etc., for factories and workshops Drainage pumps for swimming pools, trenches and sewers.
Myers or Wasp
PUMPS
for unfailing water supply
MYERS
Deep well pumping our speciality
WATER SUPPLY SPECIALISTS PVT. LTD.
330, THAMBU CHETTY STREET, MADRAS - I

தானே அறியவில்லை. பூமாவையும் என்னையும் காதலர்களாக்கிப் பள்ளிச் சுவரில் ராமசாமி எழுதிய பிறகுதான் அந்த உணர்வு வெளித் தெரிந்ததோ, என்னவோ!

பூமா என்னையே உற்றுப் பார்த்தவண்ணம், "ராஜு நம்மைப் பற்றி இப்படி விபரீதமாக எழுதி விட்டார்களே, என்ன செய்யறது?" என்றாள்.

"பூமா, உன் மனசிலே இருப்பதைச் சொல். என்னைக் கேட்டாயே, நான் இப்போது உன்னைக் கேட்கிறேன்" என்றேன்.

"வேண்டாம், ராஜு...அதைக் கேட்காதே...பிள்ளையார் முன்னாலே..." அவள் முடிக்கவில்லை. அதற்குள் அவள் முகமெல்லாம் சிவந்து விட்டது. தலையைத் திருப்பிக் கொண்டாள்.

"சொல், பூமா...சொல்! உன் மனசிலே..." என்றேன்.

"சொன்னாக் கேட்க மாட்டியா ராஜு?... நான்... நான்...சொல்ல மாட்டேன்."

"வெட்கமா?"

"இருக்காதா பின்னே?"

"இருக்கட்டும். ஆனால் என்னிடம் சொன்னால் என்ன??"

"நீ கேலி செய்வாய்."

"ஊஹூம்... பூமாவை நான் கேலி செய்வேனா?... சொல்லு, பூமா."

அவள் தயங்கினாள்.

"பார்த்தாயா, பிள்ளையாரிடம் எதையும் என்கிட்டே மறைக்கிறதில்லேன்னு தோப்புக் கரணம் போட்டிருக்கே நீ..."

இது அவளை அசைத்து விட்டது. ஆனால் அவள் சொன்னது என்னை வெறுமே அசைக்கவில்லை. உலுக்கியே விட்டது. வெறுமே உலுக்கவில்லை. ஈரேழு உலகங்கள் என்பார்களே, அவை ஆடிச் சுழல்கிறமாதிரி பேயறைந்தாற் போல உலுக்கிவிட்டது.

"ராஜு! என் மனசிலே இருக்கிறது ரொம்பப் பொல்லாதது. என்னு கேட்காதே. எனக்கே தெரியல்லேடா...நீ நல்லவன்..... நான் ..... நான் ரொம்பக் கெட்ட பொண்ணு... ராஜு, செவுத்திலே கன்னு பின்னுன்னு யாரோ எழுதினதாகச் சொன்னாயே, அவர்... அவர்தான்..."

பூமா முடிக்கவில்லை. நான் மயங்கி விழாத குறையாகப் பிள்ளையாரைப் பார்த்தேன்.. அவர் தமக்கு எல்லாம் தெரியும் என்பது போல் மௌனமாகச் சிரித்தார்.

"இதை எதற்காகக் கேட்டே நீ?...என்னை நினைக்க நானே அழறேன்...ராஜு, எனக்கு என்ன வந்துட்டுதுன்னு எனக்கே தெரியல்லேடா." பூமா அழுதாள். பிறகு படபடவென்று புறப்பட்டு விட்டாள்.

"எனக்கு நாழியாச்சு, ராஜு... நான் வரேன்."

-"இரு, பூமா... ஒரே ஒரு வார்த்தை..." என்றேன்.

அவள் நின்றாள்.

"பூமா, உன் மனசில் இருக்கிறதை என்னிடம் சொன்னதற்காக நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். அந்த நம்பிக்கை உனக்கு இருக்கிறது நான் செய்த பாக்கியம் தான்.... நீ சந்தோஷமாக இருக்கணும். பிள்ளையாரிடம் நான் அதைத்தான் கேட்டுக்



தபால்காரன் பாட்டி: என்னடாப்பா! ஊருக்கெல்லாம் கார்டும் கவரும் கொடுக்கிறியே; நம்ம வீட்டுக்கு ஒரு பேஷன் கார்டு வாங்க உனக்குத் துப்பில்லையே?

---

கொண்டேயிருக்கிறேன். ஆனால் பூமா, என்னை நல்லவன்னு நினைக்காதே. என் மனமும் பொல்லாததுதான். இப்போ எல்லாம் விளங்கி விட்டதினாலே என் எதிர்காலத்தைப் பற்றி உன்னிடம் சொல்கிறேன்: இந்தப் பிள்ளையார் ஏன் பிரம்மச்சாரியாக இருக்கிறார்? அவருடைய லட்சியப் பெண்மை தாய்க் கோலத்துள் அடங்கி விட்டது. அதே போலத்தான் பூமாவோடு எனக்கு எல்லாம் போயிற்று" என்றேன்.

சொல்லிவிட்டுத் தலையைத் தாழ்த்திக் கொண்டேன். பூமா என் தோளில் ஒரு கையை வைத்து மறு கையால் முகத்தை நிமிர்த்தினாள்.

"ராஜு, நீ ரொம்பப் பெரியவன்டா...; நான்தான் நான்தான்..." என்று விம்மினாள்.

"அழாதே, பூமா; போய் வா...." என்றேன், அழுத்தமாக, தலைநிமிர்ந்து.

அவள் தயங்கினாள்; கண்கள் கலங்க என்னைப் பார்த்தாள்; பிறகு முகத்தைத் திருப்பிக் கொண்டு பாலத்தின் மீது ஓடினாள்;

நான் சிலை போல் அங்கேயே நின்றேன்; நெடுநேரம் நின்றேன். அவள் தன் மனத்தைத் திறந்துசொன்னாளே, அது போல் அவள் கேட்டபோழுது என் மனத்தைத் திறக்க முடிந்ததா என்னால்! அதற்காகத்தான் இத்தனை பெரிய நன்மையோ? நான் என்னையே மறைக்க முயன்றபோது எனக்கே தெரியாமல் — என் பூமாவுக்கே தெரியாமல் — மற்றொன்று மறைவாக அவள் உள்ளத்தில் புகுந்து விட்டதோ!

மெள்ள மெள்ளப் பின் நிலவு தலைகாட்டிற்று. படித்துறையிலும், கோயிலின் முன்புறத்திலும் சோக மயமான அலுமினிய ஒளி படிந்தது. நிலவின் வெள்ளிக் கதிர்கள் பௌர்ணமியன்று வரக்கூடும். ஆனால் என் வாழ்வில் என்றுமே இந்த அலுமினிய ஒளி தான் போதும்!


ORWO
ORWO NP 22 120
ORWO NP 22
ORIGINAL WOLFEN













# பதினைந்து ரூபாய்

அத்தர்

இந்த உலகிலே பிறக்கத் துடிக்கும் ஒரு ஜீவன். இறக்கத் துடிக்கும் இன்னொரு ஜீவன். அன்று ஆஸ்பத்திரியை அடைந்த இந்த இரண்டுமே 'சீரியஸ் கேஸ்'தான். ஸ்மரணையற்றுத் துடித்துக் கொண்டிருக்கும் கப்பையா பண்டாரத்தின் உடல் ஒரு விபத்துக்குள்ளானது. பிறக்கவிருக்கும் ஒரு ஜீவனைத் தாங்கித் தன் நினைவை இழந்த நிலையிலே கிடத்தப்பட்டிருக்கும் பத்மாவின் உடலோ இழுப்பு வியாதிக்கு உள்ளானது.

டாக்டர் ஆஸ்பத்திரிக்குள் நுழைந்ததுதான் தாமதம். மிக ஆபத்தான இந்த இரண்டு 'கேஸ்'களின் நிலையையும் டாக்டரிடம் விளக்கினான் கம்பவுண்டர் கைலாசம்.

இரண்டு 'கேஸை'யும் ஒரே சமயத்தில் கவனிக்க வேண்டிய தமது பெரும் பொறுப்பை உணர்ந்த டாக்டர் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். டாக்டரது கண்ணசைவின் நெளிவிலே புரண்ட கருத்தைப் புரிந்து கொண்ட கைலாசம் கட்டு கட்டும் அறைக்குள் வேகமாக நுழைந்தான்.

கப்பையா பண்டாரத்தின் மார்பில் முதலுதவி என்ற பெயரில் ஒரு பெரிய கட்டு கட்டப்பட்டிருந்தது. அந்தக் கட்டு சரியாகக் கட்டப்படாமல் நழுவியிருந்ததால் அதிலிருந்து இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அதைச் சரி செய்ய முனைந்த கைலாசத்தின் கை, அந்தக் கட்டில் பட்டதும் ஒரு குலுங்கலுடன் முனகிய அந்த ஜீவன் உடலை விட்டுப் பறந்து விடவே கைலாசத்தின் உதடுகள் பிதுங்கின. கூட வந்திருந்தவர்களின் வாய்கள் விரிந்தன. ஒரே அலறல் சத்தம்!

ஆஸ்பத்திரி வாசலில் தூங்குமூஞ்சி மரத்தில் சாய்ந்தவாறு குற்றவாளியாக நின்று கொண்டிருந்த கோதண்டத்தைச் சுற்றிலும் சிலர் நின்று கொண்டிருந்தனர்.

"அந்த ஆளை விடாதே! அப்படியே கொல்லு! அவன் கையை வாங்கு! காரை யேற்றி உயிரைப் போக்கிய அந்த அயோக்கியனை உயிரோடு விடாதே! காரில் ஏறி 'ஸ்டியரிங்கை'ப் பிடிக்கத் தெரிந்து விட்டாலே இந்தப் பயல்களுக்குக் கண்ணுமண்ணு தெரிவதில்லை! இந்தப் பயல்களை அப்படியே நிக்க வைச்சுச் சுடணும்!" என்றபடி பல குரல்கள் எழுந்தன.

இத்தியாதி கோஷங்களுடன் ஏககாலத்தில் விழுந்த பல அடிகளையும், குத்துக்களையும் தாங்கியபடி கொலையாளி என்ற நினைப்பில் நின்ற கோதண்டத்தின் கண்கள் நீரைச் சொரிந்தன.

* * *

நேற்று அவனது சட்டைப்பையில் வைத்திருந்த பதினைந்து ரூபாய் திருட்டுப் போனதிலிருந்தே கோதண்டத்தின் மனம் சரியாக இல்லை. பதினைந்து ரூபாய் அவனுக்குப் பெரிதல்ல; என்றாலும் அதை எடுத்தவன் நிச்சயமாக அவனது வீட்டில் வேலை செய்து வரும் ஆறுமுகப் பண்டாரமாகத்தான் இருக்க வேண்டும்; இவ்வளவு வயதானவன் இத்தனை நாட்களாகச் செய்யாத இந்தத் திருட்டுத் தொழிலை இன்று மட்டும் செய்து விட்டானே என்ற கோபத்தால் கொதித்தெழுந்த கோதண்டம் ஆறுமுகத்தை நையப் புடைத்து விட்டான்.

'கோதண்டத்தால் அடிக்கப்பட்ட ஆறுமுகம் 'சட்டைப் பையிலிருந்து நான் எதுவும் எடுக்கவில்லை!' என்று சாதித்தபடி பெருக்கிய கண்ணீருடன் தள்ளாடியபடியே நேற்று தன் வீட்டிலிருந்து சென்றதான அந்தக் காட்சியின் நினைப்பு இன்று கோதண்டத்தை என்னவோ செய்தது.

ஒருவேளை நிரபராதியான அந்த ஆறுமுகத்தைப் பதற்றத்தில் அறைந்த அறைக்குப் பிரதியாகத்தான் இன்று, தான் இவ்வளவு அடிகளையும் தாங்க வேண்டி வந்ததோ? இன்னும் தான் இப்போது புரிந்திருக்கும் குற்றத்துக்கு என்ன தண்டனை அநுபவிக்க வேண்டி வருமோ என்ற நினைப்பில் எழுந்த துக்கம் கோதண்டத்தின் தொண்டையை அடைத்தது.

என்னதான் இருந்தாலும் இன்று அவன் அவ்வளவு பதற்றத்துடன் காரை ஓட்டி வந்திருக்க வேண்டாம். அதுவும் அந்தத் தெரு முனையின் திருப்பத்தில் காரின் சக்கரம் ஏறி இறங்கியதில் எழுந்த 'டங்' என்ற சத்தம் அவனது காதுகளில் பாயவே, பிரேக்கில் கால் பாய, கார் ஒரு குலுங்கலுடன் நின்று விட்டது.

'கார் யார் பேரிலோ ஏறி விட்டது!' என்ற நினைவு அவனைக் கவ்வியது. வெளியே எட்டிப் பார்க்கவே பயந்த கோதண்டம் பின் சீட்டின் பக்கம் மட்டும் திரும்பித் தனது கண்களைத் திறந்து பார்த்தான். நல்ல வேளையாக அவன் நினைத்தபடி பின் சீட்டில் கிடத்தப்பட்டிருந்த பத்மா, சீட்டுக்குக் கீழே விழுந்து கிடக்கவில்லை; பக்கவாட்டில் அண்டக்

கொடுத்திருந்த நிலைமையின் பிடிப்பில் நினைவற்ற நிலையில் 'கர் புர்' என்று மூச்சுக் காற்றை நெஞ்சில் கடைந்தவாறு, வாயிலிருந்து நுரைக் கொப்புளங்கள் எழும்பித் தாழப் போட்டபடியே படுத்துக் கிடந்தான் அவன்.

அவனுக்கு அப்போது ஏற்பட்ட பதற்றத்தில் எதுவும் செய்யத் தோன்றவில்லை. தனக்கு இனி என்ன நேர்ந்தாலும் நேரட்டும். 'எப்படியாவது பத்மாவை ஆஸ்பத்திரியில் ஒப்புவித்து விட்டால் போதும்' என்ற ஒரே எண்ணம் அவனை உந்தவே அவனது கார் விரைந்து வந்து விட்டது ஆஸ்பத்திரிக்கு.

இழுப்பு வியாதியுடன் போராடிக் கொண்டிருந்த நிறை மாதமான பத்மாவைக் காரிலிருந்து மெதுவாக இறக்கி ஆஸ்பத்திரியில் கிடத்திவிட்டதில் அவனுக்கு ஒரு நிம்மதி.

கொலையாளியான தனது வாழ்வு முடிந்து விட்டாலும், தன் பெயரைச் சொல்ல ஒரு குருத்து முளைத்துவிடத் தன்னாலானதைச் செய்து விட்டதான திருப்தி அவனுக்கு. ஆனால் அந்தக் குருத்து துளிர்ப்பதோ அல்லது அடி வாழையுடன் அதுவும் சேர்ந்து அழிவதோ அல்லது இரண்டும் சேர்ந்து பிழைத்திருப்பதோ எதுவும் அவன் கையில் இல்லை.

* * *

இதுவரையில் நீரைச் சிந்தி நின்ற கோதண்டத்தின் கரு விழிகளிலே திடீரென்று ஓர் அசாதாரணமான பிரகாசம். அழுகையிலும் அவன் முகம் மலர்ந்தது.

அவன் சிரித்தான்.

''இவ்வளவு அடி, உதைகளை வாங்கியும் இந்தப் பாவி இப்படிச் சிரிக்கிறானே...என்ன திமிரு? இன்னும் நல்லா சாத்துங்கடா'' என்று உறுமி எழுந்த குரல் அடங்கும் முன் கடைசியாக விழுந்த பலமான அறையையும் லட்சியம் செய்யாதபடி அவன் சிரித்துக் கொண்டேயிருந்தான். அவன் சிரிப்புக்குக் காரணமாக இருந்தது அவனது காதுகளில் பாய்ந்த 'குவா...... குவா....' என்று அலறிய அந்தக் குழந்தையின் கதறல்தான். பத்மா பிரசவித்து விட்டாள். அவன் நெடு நாட்களாகக் கண்ட கனவு இன்று பலித்தது. அவனுக்கு வாரிசு தோன்றி விட்டது.

காதுகளை நிறைத்த அந்த இன்ப ஒலியைக் கேட்டதுமே அவன் உள்ளத்தில் பாய்ந்த மகிழ்ச்சி வெள்ளம் கரை புரண்டு ஓட அதுவே சிரிப்பாக வெடித்து விட்டது. எவ்வளவோ நாட்களாக அவன் எதிர்பார்த்து ஏமாந்த அந்த இன்பக் கனவு இந்தத் துன்ப வேளையில் நனவாகிவிட்ட வெறியில் அவன் கடகடவென்று சிரித்தான்.

அவனது சிரிப்பு அடங்குமுன் சீறி வந்த 'ஜீப்' ஒன்று ஆஸ்பத்திரி வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய சப்-இன்ஸ்பெக்டரைக் கண்டதும் கூட்டத்தில் ஒரே பரபரப்பு எழுந்தது.

விபத்துக்கு உள்ளான கப்பய்யா பண்டாரத்தின் மகன் தங்கராசன் இன்ஸ்பெக்டருக்கு முன் வந்து நின்றான்.

''இதோ சிரித்துக் கொண்டு நிற்கிறானே, இந்தப் பயல்தான் என் தந்தையின் மேல் காரையேற்றிக் கொன்று விட்டான்'' என்று கோதண்டத்தைச் சுட்டிக் காட்டிய தங்கராசன் இன்ஸ்பெக்டரிடம் இன்னும் ஏதோ சொல்லுவதற்குள் 'ஜீப்'பின் பின்ஸீட்டிலே யிருந்து வேகமாக இறங்கினான் ஆறுமுகப் பண்டாரம்.

''தங்கராசு! கப்பையா மேலே காரை ஏத்திய டிரைவர் அப்பவே போலீசுக்குப் போய், 'நான் ஒரு ஆடு மேலே காரை ஏத்திட்டேன்'னு இன்ஸ்பெக்டர் ஐயாகிட்டே ஒப்புக்கிட்டானாம். நான்கூடப் போலீஸ் ஸ்டேஷன்லே அந்த ஆளைப் பார்த்துட்டுத்தான் வாரேன். நான் நேத்து வாங்கியாந்த ஆடு மேலேதான் இந்த ஐயா காரை ஏத்திட்டாரு !'' என்று சொன்ன ஆறுமுகம், கோதண்டத்தைப் பரிதாபமாகப் பார்த்தபடியே நின்றான்.

ஆறுமுகம் சொன்ன செய்தியைக் கேட்டதும் அந்தக் கூட்டமே பிரமித்தது. இப்போது ஆறுமுகத்தைக் கண்ட கோதண்டத்துக்கு அவன் தன் வீட்டு ஆறுமுகப் பண்டாரமாகவே தோன்றவில்லை. உண்மையிலேயே தன்னைக் காப்பாற்ற வந்த தன் குல தெய்வமான ஆறுமுகமாகத்தான் இருக்க வேண்டும் இவன் என்ற நினைப்பில் கோதண்டத்தின் கண்கள் இரண்டும் ஆனந்தக் கண்ணீரால் ததும்பி நின்றன.

''எசமான் ! நேத்து உங்க வீட்டிலே பதினஞ்சு ரூபா திருடினது என் மகன்தானுங்க. ஏதாவது வேலைக்குச் சேர்க்க செய்யும்படி உங்களண்டை அழைத்து வந்த என் மகன் இப்படிச் செய்வான்னு நான் நெனைக்கவேயில்லீங்க. அவன் செய்த வேலைக்கு எனக்குக் கைமேலே கூலி கிடைச்சுடுத்துங்க. நேத்து உங்க ஜேபியிலே எடுத்த பதினஞ்சு ரூபாய்க்கு வாங்கியாந்த அதே ஆட்டின் மேலேதான் உங்க கார் ஏறி அந்த ஆடு செத்திடுச்சுங்க. என் தம்பி கப்பையா மேலே கார் ஏறினதும், நீங்க ஆடு மேலே காரையேத்தியதும் ஒரே சமயத்தில் கூப்பிடு தூரத்துக்குள்ளாற நடந்திருக்குதுங்க. விசயம் விளங்காதவங்க தப்புக் கணக்குப் போட்டு உங்களை இந்த இக்கட்டுலே கொண்டாந்து நிறுத்திட்டாங்க. ஆடு மேலே காரையேத்திய உங்களை அந்த இடத்திலேயே கையைத் தட்டிக் கூப்பிட்டேனுங்க. நீங்கதான் கண்ணு மண்ணு தெரியாமல் காரை வேகமாகக் கிளப்பிக்கிட்டுப் போயிட்டீங்க, எசமான் ! உடனேதான் என் தம்பி கப்பையா காரிலே அடிபட்ட சேதி கேட்டு நானும் கூட உள்ளவங்களும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனோமுங்க. அங்கே போனப்பதான் ஆஸ்பத்திரியிலே கப்பையா கண்ணை மூடிட்ட சேதி காதுக்கு எட்டிச்சுங்க.

''என் குடும்பத்துக்கு மாசா மாசம் பதினஞ்சு ரூவா கொடுத்துக் காப்பாத்தின கப்பையாவும் இப்ப போயிட்டான் எசமான் ! என் மகன் திருடின ஒரு பதினஞ்சு ரூவாயிக்கு 'பதினஞ்சு ரூவாங்கிறதே ஒரு தண்டனையாகப் போச்சுங்க' எசமான்! இதுக்கெல்லாம் ஆளான பாவியை இப்பவாவது மன்னிச்சுடுங்க எசமான்!'' என்று ஆவேசமாகக் கூறிய ஆறுமுகம், ''ஐயோ கப்பையா! கப்பையா!'' என்று அலறியபடியே ஆஸ்பத்திரிக்குள் சென்றான்.

நேற்று ஆறுமுகத்தை அடித்த கோதண்டத்தின் அதே கைகள் இப்போது அவனை அணைக்கத் துடிதுடித்தன !

# இருமலை நிறுத்த
# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சாப்பிடுங்கள் சிவப்பு லேபில்





விடாது தொடர்ந்து தொல்லை கொடுக்கும் இருமலைப் பற்றி அசிரத்தையாக இருக்கக் கூடாது. அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பிடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் குவயகால் இருமலை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியையூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.






வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் குவயகால், சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை இளக்கி வெளியேற்றி சுவாசப்பையை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக்குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் மீண்டும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

**இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது**

வார்னர் இந்துஸ்தான் லிமிடெட் பம்பாய்

JWT-WL 2394

# புடலங்காய் மாகாத்மியம்

வாநாமா

அந்தம்மா பெற்ற பதினேழு பிள்ளைகளும், டப்ளின் எங்கே, ஹாங்காங் எங்கே, ஜிப்ரால்டர் எங்கே, சோட்டா நாக்பூர் எங்கே, ரஷ்யா எங்கே, ஜப்பான் எங்கே என்று பல இடங்களிலும் பல துறைகளில் வாழ்க்கைத் திட்டத்தை அமைத்துக் கொண்டார்கள். ஒருவன் பட்டாளக்காரனால் மற்றொருவன் எஞ்சினீயர். பின்னொருவர் ஐ. ஸி. எஸ். ஆனால், அவனுக்குப் பெரியவன் பாதிரி. காடு மேடெல்லாம் சுற்றி ஈசன் பாதையில் வழி நடந்தான். ஒருத்தி குழந்தை குட்டிகளுடன் தன் நாட்டிலேயே இருந்தாள். மற்றொருத்தி மணம் புரியாமல் தாய்த் தேசத்தைக் கைதூக்கி விட தம் இந்திய நாட்டுக்கு வந்து சேர்ந்தாள். சில காலம் அவளுடன் பாதிரிப் பெருமானும் சேர்ந்து ஏசு தர்மத்தைப் பரப்பி வந்தார். பிறகு வட இந்தியாவை விட்டுத் தென் தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்தார். திருச்சியில் காவேரிக் கரையைக் கண்டதும் அவருக்கு ஏற்பட்ட குதூகலத்துக்கு அளவே கிடையாது. அவர் விரும்பினாற் போல், திருச்சியிலேயே அவருக்கு ஒரு கல்லூரி முதல்வர் வேலையும் கிட்டியது.

தம் மாணாக்கர்களுடன் நெருங்கிப் பழகி அவர்களது அன்புக்குப் பாத்திரமானார். நான் தவறினாலும் தவறலாம், அவர் வாக்கிங் போகத் தவற மாட்டார். புதிதாகத் திருச்சிக்கு வந்த காலத்தில் சிந்தாமணி வழியே நடக்கும் பொழுது ஒரு நாள் கறிகாய்க்காரர்கள் கட்டுக்கட்டாகப் புடலங்காய் தூக்கிச் செல்வதைக் கண்டார். நமக்கெல்லாம் புடலங்காய் பழையதுதான். அவருக்கு, [illegible]விலிருந்து வந்த அவருக்கு அது புதிதல்லவா? விசாரித்தார்: காய்கறி என்று தெரிய வந்தது. தாமும் சாப்பிட்டால் என்ன என்று தோன்றவே விலைக்கு வாங்கினார். அதுவும் அந்தக் காலத்தில் இரண்டு அணாவுக்கு நான்கு புடலங்காய் கிடைக்கும். தம் பையிலிருந்து நாலணாக் காசை எடுத்துத் தந்து எட்டுப் புடலங்காய்களை வாங்கிக்கொண்டு தமது அறைக்கு வந்து சேர்ந்தார்.

வட இந்தியாவிலிருந்து தென்னாட்டுக்கு வரும் பொழுதே அவர் அந்நாட்டுப் பட்லர் ஒருவனையும் தம்முடன் அழைத்து வந்திருந்தார். அவனுக்குத் தென்னாட்டுச் சமையலோ, காய்கறிகளை வேக வைப்பதோ தெரியாது. அவனைக் கூப்பிட்டு இரவு டின்னருக்குப் புடலங்காய்க் கறி சமைக்கும்படி சொன்னார். அதை அவன் சமைப்பதற்குத் திட்டம் போட்டான்.

உடனே கீழே வந்து ஒரு தகரக் கடைக்காரனை அழைத்துச் சென்றான். பாதிரியும் சந்தோஷமாக ஒரு பெரிய குழாய் தயார் செய்யச் சொன்னார். தகரக் கடைக்காரன் நீண்ட குழாயாக ஐந்து ஆறு அடிக்கு ஒரு குழாய் தன்னிடம் தயாராக இருந்ததை எடுத்துத் தந்தான்: அதன் விலையாக ரூபாய் இரண்டையும் வாங்கிக் கொண்டான். அவன் நினைத்தான், பங்களாவில் மழை நீர் தேங்காமல் இருக்க எங்கேயோ குழாய் பதிக்கப் போகிறார்கள் என்று! பட்லரும் குழாய் எதற்கு என்று சொல்லவில்லை:

பட்லர் எட்டுப் புடலங்காய்களையும் அந்தக் குழாயில் அடைக்க முயன்றான்: ரொம்பவும் கஷ்டப்பட்டு நான்கை மட்டும் போட முடிந்தது. மற்ற நான்கை மறுநாளைக்கு வைத்துக் கொள்ளலாம் என்று நிறுத்திவிட்டான். அவனும் புதுப் பாதிரியுந்தானே? எட்டு எதற்கு என்று எண்ணினான். பிறகு போய் ஒரு தலைச் சுமை விறகை வாங்கி வந்தான். எப்படி இதைச் சுட வைப்பது என்று யோசனை அப்புறந்தான் ஓடியது. வேக வேண்டுமே! குழாயோ புதிது. உஷ்ணத்தில் உருகி விட்டால் என்ன செய்வது? ஒரு யோசனை ஓடியது. அதன்மேல் ஒரு வைக்கோல் பிரியைச் சுற்றி விட்டால் போதும் என்று எண்ணி வாசலில் நின்று கொண்டிருந்த வைக்கோல் வண்டிக்காரனிடம் இரண்டு மூன்று பிரிகள் விலை பேசி வாங்கி வந்தான். குழாய் முழுவதையும் வைக்கோல் பிரியால் நன்றாகச் சுற்றி விட்டுப் புடலங்காயைத் தகதக வென்று தீ மூட்டிக் கறி சமைக்கலானான். சற்று நேரத்துக் கெல்லாம் பாருங்களேன் வேடிக்கையை!

யாருக்கும் தெரியாமல் எடுத்துப் பார்த்தான். கருமி ஒருவன் ஒளித்து வைத்திருக்கும் பணப் புதையல் எடுப்பது போல். ஒரே சொள சொள வென்று கொஞ்சம் சரக்குக் கிடைத்தது. அதைப் பிளேட்டில் வைத்து மற்றப் பதார்த்தங்களுடன் துரையின் மேஜையில் கொண்டு வந்து வைத்தான். துரைக்கு நாக்கில் ஜலம் ஊறிற்று. புதுச்சாப்பாடு. தென்னாட்டுக் கறி. அதுவும் அழகிய புடலங்காய்க் கறி. இரண்டொரு ஸ்பூன் வாயில் வைத்து தொட்டை விட்டார். ஒன்றும் புரியவில்லை. எப்படியோ சமாளித்து இரவு போஜனம் செய்து விட்டு உறங்கினார். கனவில் ஏதோ பாம்பு தம் வயிற்றிலே குழறுவது போல் தோன்றியது:

எப்படியோ இரவுப் பொழுதைக் கழித்து விட்டுக் கல்லூரிக்கு வந்தார். சில பழைய மாணாக்கர்களிடம் கதையைச் சொன்னார். அதைக் கேட்டு அவர்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள். ஆனால் அவருக்குப் புடலங்காய்க் கறி செய்யும் விதத்தைச் சொன்ன பொழுது. புடலங்காயை அப்படி நறுக்கவும் செய்யலாமா என்று கேட்டு அவர் வியந்தார். மறுநாள் ஒரு மாணவன் தம் வீட்டிலிருந்து புடலங்காய்ப் பொரியல் கொண்டு வந்து சாப்பிடச் சொன்னபோது நிசமாகவே அவர் தொட்டை விட்டுச் சாப்பிட்டார். அதற்குப் பின் புடலங்காய்க் கறி சாப்பிடும் பொழுதெல்லாம் அவர் முகத்தில் புன்முறுவல் பாயாமல் இருந்ததில்லை:

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

# உங்கள் மனைவி மக்களுக்காக நீங்கள் செய்யவேண்டிய கடமை



## ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவின் உதவிபெறுதலே

குடும்பத் தலைவராகிய உங்களை நம்பிவாழ்வோரின் நலனைக் கருதி, உற்ற முறையில் உயில் எழுதிவைத்து, சட்டபூர்வமாக யாவற்றையும் சரிசெய்து வைப்பது உங்கள் கடமை.

ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா தங்கள் வாடிக்கையாளர்களுக்கு எக்ஸிக்யூட்டராகவும் டிரஸ்ட்டியாகவும் செயல்பட்டு, கீழ்க்காணும் வகைகளிலே நியமனம் பெற்றுப் பணிபுரியும்: (1) உயிலை அமல் நடத்தும் அதிகாரியாக, (2) பொதுநல, மத, தரும, மற்றும் தனியார் டிரஸ்ட்டுகளுக்குப் பொறுப்பாளராக, (3) பிராவிடெண்ட் மற்றும் பென்ஷன் நிதிகளுக்குக் காப்பாளராக (4) 1874 ஆண்டின், மணமான பெண்டிரின் சொத்துரிமைச் சட்டத்தின் கீழ் ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் பாலிசிகளுக்கு விசேஷப் பொறுப்பாளராக.

இத்தகைய அலுவல்களை ஆற்றுவதற்கும், தேர்ந்த சட்ட உதவியைப் பெறுவதற்குமான ஊழிய நிபுணர்களைக் கொண்டுள்ளோம். உங்கள் அலுவல்களை எம்மிடம் ஒப்படையுங்கள், செவ்வனே கவனித்துக்கொள்கிறோம்.

உங்கள் கிளைகளிலுள்ள ஏஜெண்டுகள் மகிழ்ச்சியோடு உங்களுக்குத் துணைபுரிவர்.

## ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

பாரதத்தின் தலைசிறந்த பாங்கு

---

Aiyars SB. 602 TM A

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

